Registered No. M. 3536.

தனிப்பிரதி விலை { உள்நாடு அணா 1 / சிலோன் ,, 1¼ / மலேயா, பர்மா ,, 2

# நவசக்தி

"NAVASAKTI"

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

**சந்தா விவரம்**

| | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 4 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 2 | 4 |
| வெளிநாடு-வருட சந்தா ... | 6 | 0 |

**விளம்பர விகிதம்**

பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 6 0
சில்லறை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்பட மாட்டாது.

சிலம்பு ௧௫ ஈசுவர௵ சித்திரைமீ ௧௧உ (23—4—1937) வெள்ளிக்கிழமை பரல் ௪௧

## "திருவிளையாடல்"

அருவிபடிந் தருவியெறி மணியெடுத்துப்
பாறையிலிட் டருவி நீர்தூய்க்
கருவிரல்கொய் தலர்சூட்டிக் கனியூட்டி
வழிபடுவ கல்லா மந்தி
ஒருதுறையில் யாளிகரி புழைக்கைமுகந்
தொன்றற்கொன் றூட்டி யூட்டிப்
பருகுவன புலிமுலைப்பால் புல்வாய்க்கன்
றருத்தியிடும் பசிநோய் தீர.

நெளியராக் குருளைவெயில் வெள்ளிடையிற்
கிடந்துயங்கி நெளியப் புள்ளே
ரொளியருச் சிறைவிரித்து நிழல்பரப்பப்
பறவைநோ யுற்ற தேகொல்
அளியவா யச்சோவென் றேதியபன்
மடமந்தி யருவி யூற்றுந்
துளியநீர் வளைத்தசுப்பின் முகந்தெடுத்துக்
கருங்கையினூற் சொரிவ மாதோ.

படவரவ மணியீன்று நொச்சிப்பா
சிலையன்ன பைந்தாள் மஞ்ஞை
பெடைதழுவி மணஞ்செய்ய மணவறையில்
விளக்கிடுவ பெருந்தண் கானத்
தடர்சிறைமென் குயிலோமென் றூர்ப்பமடக்
கிள்ளையெழுத் தைந்து மோசைத்
தொடர்புபெற வுச்சரிப்பக் குருமொழிகேட்
டங்குவப்ப தொடிக்கட் பூவை.

## "நவசக்தி" கிடைக்கும் இடங்கள்

1. A. சிவதாணுமாலையன் பிள்ளை, National News Agency, செய்யூர் P. O. தென் திருவிதாங்கூர்.
2. R. சாமிநாதன், 7, காசி பண்டார வீதி, மாயவரம்.
3. C. N. நாராயணன், News Agent, இராஜா தெரு, கோயமுத்தூர்.
4. நவீனகதா புத்தகசாலை, இரங்கூன்.
5. T. இராமசாமி, கதர் வஸ்திராலயம், தூத்துக்குடி.
6. V. V. சண்முகம், 165, கொழும்பு வீதி, கண்டி, சிலோன்.
7. C. K. கணேசன், The National News Agency, நாகர் கோயில்.
8. P. M. R. முத்துசாமி ரெட்டியார், The Indian National News Mart, Slave Island, கொழும்பு.
9. V. S. சிவப்பிரகாச முதலியார், நியூஸ் ஏஜண்ட், எட்டயம்மன்கோவில் வீதி, தோட்டபாளையம், வேலூர்.
10. N. நடராஜ முதலியார், நியூஸ் ஏஜண்ட், ஸ்ரீவில்லிபுத்தூர்.
11. S. மாசிலாமணி பிள்ளை, தெப்பகுளம், திருச்சினாப்பள்ளி.
12. S. N. சோமயாஜுலு, சங்கரன்கோயில்.
13. K. கணபதி பிள்ளை, Times Agent, திருநெல்வேலி ஜங்ஷன்.
14. C. P. தனபால், கமிட்டி ஆபீஸ், ஊர்க்காம், (K. G. F.)
15. M. S. சுப்பிரமணியம், வண்ணார்பண்ணை, யாழ்ப்பாணம்.
16. ரங்கசாமி நாயுடு, தென்காசி.
17. N. ராமாமிர்தம், நியூஸ் ஏஜண்ட் & Correspondant, Small Bazaar Street, பட்டுக்கோட்டை.
18. K. சிவசைலம், நியூஸ் ஏஜண்ட், Pensioners Street, திண்டுக்கல்.

### மலேயா & சிங்கப்பூர் ஸோல் ஏஜண்டு

P. சிவகுரு,
தபாற்பெட்டி நெ. 255,
No. 108, Brickfield Road,
கோலாலம்பூர், (F. M. S.)

## ஆயர்பாடி மங்கையர்

(பண்டிதை S. கிருஷ்ணவேணி அம்மாள்)

I

### ஆயர்பாடி

ஆயர்பாடியில் ஞானபக்திவைராக்கியங்களிற் சிறந்த (அநந்யார்ஹ சேஷபூதரான) பெண்களின் கூட்டம் ஒன்று திரண்டது. அது திருமந்த்ரம், த்வய மாகிற ஞானக்கடலில் குளித்துக் குளித்துச் சேஷத்வ பாரதந்த்ர்ய முத்துகளை எடுத்து அவைகளைக் கொண்டு தன்ஸ்வரூபத்திற்குக் கைங்கரியமாகிற ஆபரணத்தை அணிந்து அழகுபார்க்கும் ஓர் ஒப்பற்ற சிறந்த கூட்டம். அக்கூட்டத்தின் கொள்கைகளையும், குணங்களையும் அளவிட்டுக் கூறல் அரிதினுமரிது. அம்மங்கையர் புருஷகாரபூதையான பெரியபிராட்டியாரையும், ஆசாரியனையும் முன்னிட்டுக் கைங்கர்ய தன்மை வாய்ந்த நோன்பு ஒன்றை மேற்கொண்டனர். தேகாத்மாபிமானம் அவர்களை விட்டுப் பறந்தது. அதனால், அவர்கள் பாகவதர் பெருந்தன்மையையும், அவர்தம் கூட்டுறவின் இன்றியமையாமையையும் உணர்ந்தார்கள். ஆசாரியனின் கருணைப்பனி அவர்கள் தலைமேல் துளித்தது. பகவத்பாகவத குணப்பெருக்குகள் அம்மங்கையர்முன் ஆறுகளாகப் பெருகின; மழைகாலவெள்ளமெனப் பாயும் அதில் ஆழ்ந்து ஆழ்ந்து குளித்தனர். அப்பகவத்பாகவத குணநீரின்கண் வாத்ஸல்யம் முதலிய குணங்களைப் பெற்ற நாராயணனின் உருவம் திருமகளுடன் காணப்பட்டது. தாம் மேற்கொண்ட கருமம் முடிந்ததாக அம்மங்கையர் ஆநந்தமடைந்தனர். உடனே அஹங்கார, மமகாரங்கள் அவர்களைவிட்டு ஓடி ஒளித்தன. என்றும், எப்பிறவியிலும் எம்பெருமானுக்கே அடிமைகளாய் (சேஷபூதராய்)இருந்து கைங்கரியமியற்றுதல், அக்கைங்கரியத்தைத் தம் இன்பத்திற்கென நினைக்கும் நினைப்பையொழித்தல் என்ற இந்த இரண்டுவரங்களையும் அம்மங்கையர் திருமாலைக் கேட்டுப் பெற்றனர். அவைகளைப் பெற்ற உயர்குணம் வாய்ந்த அப்பாவையர் இன்பந்துய்த்ததுமன்றி மற்றையோரையும் பயன்றுய்க்கச் செய்தனர்.

### கோதையாரின் பக்தி

அத்துணை அவ்வாயர்பாடி மக்களின் செய்கை நம் சூடிக்கொடுத்தாரின் மனத்தைக் கவர்ந்தது. எம்பெருமானைச் சென்றடைதற்குப்பொருத்தமான வழி அஃதே என்பது அவர் கருத்து. தெய்வத்தன்மை வாய்ந்த அவ்விடை மங்கையரே தமக்குவழிகாட்டிகளென்றும், ஆசாரியர்கள் என்றும் அவர் கருதினர். அப்பெண்கள் நம் கோதையாரின் மன ஆசனத்தில் சீரிய இடத்தைப் பெற்றார்கள். இன்றேல் அவ்விடை மாதரின் கொள்கையையே நம் அன்னையாரும் பின் பற்றுதல் யாங்ஙனம்! ஆனால் அவர்கள் போக்குச் செயலில் அமைந்தது; இவர்போக்கு நினைப்பில் அமைந்தது. அதுவே திருப்பாவை எனப் பேர் பெற்றது.

இத்திருப்பாவையைத் தெள்ளித் தெளித்து வடித்துப்பார்க்குங்கால் ஈஸ்வரனின் மாரிவெள்ளம் போன்ற குணானுபவங்களில் மூழ்க இச்சித்தல் அவனையே உபாய உபேயமாகப் பற்றுதல் ஆகிய இவைகளே வெளிப்படுகின்றன. அவனையே உபாய உபேயமாகப் பற்றுதற்குக் காரணம் நாராயணபதத்தின் பொருளாகிய வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்பயம், ஞானம், சக்தி முதலிய அவன் குணங்களேயாகும். இக்குணங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொறுப்பை அவன் மேல் ஏற்றுகின்றது. சேதனர் இயற்றும் குற்றங்களைக் குணமாகக் கொள்ளும் பொறுப்பைவாத்ஸல்யமும், சேதனன் கருதும் எக்காரியத்தையும் செய்துதரவேண்டிய சுமையை ஸ்வாமித்வமும், தாழ்ந்தவர்களோடும் ஒன்றறக் கலந்து பரியாறும் பாரத்தை ஸௌசீல்யமுஞ், சேதனர் கண்ணாலே கண்டு ஆஸ்ரியிப்பதற்குத் தக தன்வடிவைக் காட்டிநிற்கும் தன்மையை ஸௌலப்பயமும், சேதனருக்கு விரோதியைப் போக்கி அவன் இச்சித்ததைத் தருதல் அச்சேதனன் நினைவை அறிதல், அறிந்தபடியே செய்து முடித்தல் ஆகிய பொறுப்புகளைச் சக்தி ஞானங்களும் அவன்மேல் ஏற்றுகின்றன.

### கண்ணனின் பல பெயர்கள்

ஒருவர்தம் கல்வியின் பெருக்கினாலும், நுட்பஅறிவினாலும், உலக நடையை உணர்ந்து ஒழுகலினாலும் பொறுப்புகள் பலவற்றை ஏற்று அவற்றிற்கேற்பப் பெயர்கள் பெற்று வாழலாம்: ஒருவரே வக்கீல், சட்டசபை அங்கத்தினர், ஒரு சங்கத்தின் தலைவர், கணக்குப் பரிசோதகர், தந்தையார் முதலிய பேர்களைப் பெறுகின்றனர். அத்தகையோரை அவர் மகன், வழக்காடுமிடத்தில் வக்கீல் எனவும், சட்டசபைக் காரியத்தை மேற்கொள்ளுங்கால், சட்டசபை அங்கத்தினர் எனவும், சங்கத்தை நடாத்துங்கால் தலைவர் எனவும், கணக்கை நோக்குங்கால் பரிசோதகர் எனவும், தன்னிடம் அன்பு பாராட்டித் தன் காரியங்களைச் செய்யுங்கால் தந்தையர் எனவும் அழைக்கக் கேட்கின்றோம். அங்ஙனமே நம் கோதையாரும் கண்ணனுக்கு அந்தந்த இடத்தின் பொறுப்பிற்கேற்ற திருநாமங்களை வைத்து அவனை அழைக்கின்றார்.

இவர் வார்த்தைகளினால் அவனே உபாய உபேய மென்பதைத் தெள்ளிதின் உணருகின்றோம். இலக்கணத்தை நம் மனத்தில் ஊன்றவைப்பது அதை உதாரணப்படுத்திக் காட்டும் இலக்கியமன்றோ! அஃதின்றேல் இலக்கணத்தின் பயன்யாது! இருந்தும் இல்லாததேயாகும். அதுபோல வாத்ஸல்யம் முதலிய குணங்களால் அவனே உபாய உபேய மென்னும் இலக்கணத்தைத் திருப்பாவையாகிற இலக்கியமே பளிங்கெனக் காட்டுகின்றது எனக்கூறல் மிகையாகாது. இதை அவர் பாசுரங்களின் உள் நுழைந்து பார்ப்போர் நன்கு உணர்வர்.

---

## 'வேர்க்கடலை தின்னுங்கள்'

உடம்புக்கு நல்லது

(சகோதரி அஹிம்ஸா தேவி)

வேர்க்கடலை, நிலக்கடலை, மணிலாக் கொட்டை, கடலைக் கொட்டை முதலியன ஒரே பொருளின் பெயர்கள். இந்த வேர்க்கடலை நமது நாட்டில் ஏராளமாகப் பயிரிடப்படுகிறது. வேர்க்கடலையில் வேண்டியமட்டும் சத்து இருக்கிறது. பசும்பால் உடம்புக்கு எவ்வளவு புஷ்டிதரக் கூடுமோ அவ்வளவையும் வேர்க்கடலையிலிருந்து எடுக்கப்படும் பால் தரும். வேர்க்கடலையிலிருந்து முறைப்படி தயாரித்தால் புட்டிப் பாலைவிடப் பரிசுத்தமான பால் தயாரிக்கக் கூடும்.

ஏழைகள் பசும்பாலுக்கு எங்கே போவார்கள்? அநேகமாகப் பெரும்பாலான பசுக்கள் சுகாதாரமுறைப்படி பாதுகாக்கப்படுவதில்லை. ஆகையினால் பல பசுக்கள் க்ஷயநோயைஉண்டுபண்ணக்கூடியன வாயிருக்கின்றன. ஆனால் குறைந்த செலவில் பரிசுத்தமானபாலை மணிலாக் கொட்டையிலிருந்து தயாரிக்கலாம். நிலக்கடலைப் பாலிலிருந்து தயாரிக்கப்படும் வெண்ணை மிகுந்த புஷ்டியளிக்கக் கூடியது. மகாத்மா காந்தி நிலக்கடலையை வெகுவாகப்புகழ்கிறார்; ஏராளமான நிலக்கடலை இந்தியாவில் பயிராகும்பொழுது, வெளிநாட்டிலிருந்து எதற்காக ஸோயா பருப்பை இறக்குமதி செய்தல் வேண்டும்? சீனா, ஜப்பான் முதலிய நாட்டுமக்கள் ஸோயா பருப்பையும், வேர்கடலையுமே உபயோகிக்கிறார்கள்; பசும்பாலை அவ்வளவாக உபயோகிப்பதில்லை. மேலும் சிற்சில நோய்களையும் வேர்க்கடலைதின்பதால் தவிர்க்கக்கூடும். ஆகவே வேர்க்கடலையை உபயோகியுங்கள்.

"ஹெல்த்"

## ஏஜண்டுகள் தேவை.

மதுரை
சேலம்
குடியாத்தம்
தஞ்சாவூர்
கும்பகோணம்
திருநெல்வேலி டவுன்
சாத்தூர்
விருதுநகர்
அருப்புக்கோட்டை
கூடலூர்
திருப்பாதிரிப்புலியூர்
விழுப்புரம்
திண்டிவனம்
பழனி
ஆம்பூர்
வாணியம்பாடி
ஆரணி
திருவள்ளூர்
அரக்கோணம்
சிதம்பரம்
சீர்காழி
இராமநாதபுரம்
காரைக்குடி

மானேஜர்,
"நவசக்தி" ஆபீஸ்,
இராயப்பேட்டை, சென்னை.







வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கடு | ஈசுவரஹு சித்திரைமீ கக௨ (23—4—1937) வெள்ளிக்கிழமை | பரல் சக

## சிலம்பொலி

### திருவள்ளுவர்

அதிகாரம் 1

திரு. வி. க.

(தொடர்ச்சி)

உலகில் பாவத்தைப் பற்றிய பேச்சு அதிகம்; ஆராய்ச்சி அதிகம். அதை அறுக்கும் முயற்சியோ குறைவு.

பாவம் உண்டா? இல்லையா? அஃது ஆதியா? அநாதியா?—இவை போன்ற ஆராய்ச்சிகள் நீண்ட காலமாக நிகழ்ந்த வண்ணமாயிருக்கின்றன. இவ்வாராய்ச்சிகளால் விளையும் பயன் மிகமிகச் சிறிது. இவை கலை ஞானிகளின் பொழுது போக்குக்கு ஒரோ வழி துணை புரியும். ஆராய்ச்சியுடன் முயற்சியும் வேண்டும்.

பாவம் உள்ளதாயினுமாக; இல்லதாயினுமாக; ஆதியாயினுமாக; அநாதியாயினுமாக. பாவம் வாழ்வில் நிகழ்தல் உண்மை. அது நிகழ்ந்து நிகழ்ந்து பெருகுதலும் உண்மை. அதைப் பெருகாதவாறு தடுத்து, அறவே ஒழிக்க வழி தேடுவது அறிவுடைமை.

பாவத்தில் வீழ்வோர் எளிதில் எழுதல் இயலாது. பாவம் நாளுக்கு நாள் படிப்படியே கொடி போல் வளர்ந்தே போகும். ஒரு பாவத்தினின்றும் ஓராயிரம் பாவம் பிறக்கும். அவை கடலெனப் பெருகும். அவைகளின் பெருக்கைக் குறிக்கவே பிற ஆழி (பல கடல்) என்றார் ஆசிரியர். பாவம் ஒரு கடலாக அன்றிப் பல கடலாகப் பெருகுந் தன்மையுடையது என்றபடி.

மேலும் மேலும் பெருகுந் தன்மை வாய்ந்த பாவம் எங்கே முடிவடையும்? அதற்கு முடிவுண்டா? இல்லையா? முடிவுண்டாயின், அம்முடிவு காண எவ்வழியைக் கடைப்பிடிப்பது? இன்னோ ரன்ன வினாக்கள் சிந்திக்கற்பாலன.

பற்றிய பாவத்தைப் பெருக விடாது குறைக்கவும், அறவே குலைக்கவும் வழிகள் உள்ளன. அவை பலபடச் சான்றோர்களால் சொல்லப்பட் டிருக்கின்றன. அவைகளுள் அரியனவும் உண்டு; எளியனவும் உண்டு.

கடும் விரதங்கள், அருந்தவங்கள், பெருஞ் சீலங்கள், கொடும் யோகங்கள் முதலியன அரியன. வீட்டைத் துறத்தல், காட்டுக்கேகல், பட்டினிகிடத்தல், உடலை வருத்தல், கனலிடை நிற்றல், புனலிடை மூழ்கல், மூக்கைப் பிடித்தல், மூச்சை அடக்கல் முதலியவற்றின் அருமைப்பாடுகளை விளக்கவேண்டுவதில்லை. வீட்டிலிருத்தல், பிறர்க்கென வாழல், தானஞ் செய்தல், சீலங் காத்தல், ஆண்டவனை வழிபடல் முதலியன எளியன. இவ்வெளியனவற்றுள்ளும் எளியதொன்றிருக்கிறது. அஃது எது? அஃது அறவாழி அந்தணன் தாளைச் சேர்வது.

சேர்தல் நினைத்தல் என்பது மேலே விளக்கப்பட்டது. இறைவன் தாளை நினைப்பதால் பாவங்கள் அறுந்து போகுமா என்று எவரும் ஐயுறவேண்டுவதில்லை; சிறிதும் ஐயுறவேண்டுவதில்லை.

மக்கள் எப்படியோ பாவத்துக்கு ஆளாகிறார்கள். அதற்கு ஆளாகும் எளிமை மக்களிடம் இருக்கிறது. இவ்வெளிய மக்கள் தங்கள் வல்லமையால் மட்டும் பாவங்களினின்றும் விடுதலையடைதல் அருமை. செய்த பாவங்களை ஒழிக்கவும், இனிப் பாவங்கள் செய்யாத ஆற்றலைப் பெறவும் தங்கள் வல்லமையைக்காட்டிலும் மேலான வல்லமையுடைய ஒருவன் துணையை நாடுதல் வேண்டும். அவன் எத்தன்மையனாயிருத்தல்வேண்டும்? பாவமற்றவனாய், இரக்கமுடையவனாய், முறையீட்டுக்குச் செவிசாய்த்து எளிவருபவனாயிருத்தல் வேண்டும். இந்நீர்மையன் எவன்? ஆண்டவன் ஒருவனே. அவன் அறவாழி அந்தணன்.

அறவாழி அந்தணனை நினைந்து நினைந்து, செய்த பாவங்குறித்து உண்மையாக வருந்தி வருந்திக் கசிந்து கசிந் துருகி அழுது அழுது நிற்பவர் மீண்டும் பாவத்தில் நாட்டஞ் செலுத்தவும் அஞ்சுவர். பாவத்தில் அச்சம் தோன்றப் பெற்ற மனம் மீண்டும் பாவஞ் செய்ய ஒருப்படாது. மீண்டும் பாவஞ்செய்ய ஒருப்படாத மனத்தில் ஆண்டவன் அருள் சுரந்தே தீரும். அவ்வருள்நீர், பழைய பாவங்களைக் கழுவும். மக்களின் அழுகைமட்டும் உண்மையுள்ளதா யிருத்தல்வேண்டும். அழுகை உண்மையா போலியா என்பது எங்குமுள்ள ஆண்டவனுக்குத் தெரியும். அவனை ஏமாற்றல் எவராலும் இயலாது. இறைவன் தாட்சேர்க்கை பாவவேர் அறுப்பதற்கு வேண்டற்பாலது. இது பற்றியே, "அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால் - பிறவாழி நீந்தல் அரிது" என்றார் ஆசிரியர்.

அறவாழி அந்தணன் தாளைச் சேர்ந்தோர் பிறவாழிகளை எளிதில் கடத்தல் ஒருதலை. பாவக் கடல்களைக் கடப்பதற்கு இறைவன் தாள் புணை போன்று துணைபுரிவதாகும்.

"பிறவாழி" என்பதற்குப் பரிமேலழகர் "பிறவாகிய கடல்களை" என்று பொருள் கூறி, "அறம் பொருளின்பமென உடனெண்ணப்பட்டமூன்றனுள் அறத்தை முன்னர்ப் பிரித்தமையான், ஏனைப் பொருளும் இன்பமும் 'பிற' என்னப்பட்டன" என்று விரிவுரை கூறியுள்ளார். "பொருளின்பமெனவிரண்டு மிறுத்தேன்" என்பது பெரிய திருமொழி.

"* * * பிறவாழியை நீந்தலாகாது. அது பெறுதலரிது. இது காமமும் பொருளும் பற்றிவரும் அவலங் கெடுமென்றது" என்று மணக்குடவர் கூறுகிறார்.

"பிறவாழி" என்பதைப் பிறவு ஆழி என்று கொண்டு, அதற்குப் "பிறவிக்கடல்" என்று பொருள் கூறுவோருமுளர். பிறவு - பிறப்பு. "மருந்தவன் வானவர் தானவர்க்கும் - பெருந்தகை பிறவி நோயறவு மானன் - அருந்தவ முனிவரொ டானிழற்கீழ் - இருந்தவன் வளநக ரிடைமருதே"—தேவாரம். "கார்படைத்த நிறத்தோனைக் கைதொழுவார் பிறவாழிக் கரை கண்டாரே"—பாரதம்.

---

9

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
*இறைவ னடிசேரா தார்.

(பொ - ள்) இறைவன் அடி (சேர்ந்தார்) - இறைவன் திருவடியைச்சேர்ந்தவர், பிறவி பெருங்கடல் - பிறவியாகிய கரைகாணாக் கடலை, நீந்துவர் - கடப்பர், இறைவனடி சேராதார் - இறைவன் திருவடியைச் சேராதவர், நீந்தார் - (பிறவிப் பெருங்கடலைக்) கடவார்.

(க - து) இறைவனடி சேர்ந்தோர் பிறவிக்கடலை நீந்துவர்.

(வி - தி) பிறவி-பேதைமை காரணமாக வருவது.

பிறவிகள் பலதிறத்தன. அவைகளுள் சிறந்தது மனிதப்பிறவி. என்னை? மனிதப் பிறவியில், உயிர் தன்னைப் பற்றியுள்ள பேதைமையின் இருப்பைத்தெரிதற்கும், தன்னையறிதற்கும், தனக்காதாரமாயுள்ள தலைவனை யுணர்தற்கும் உரிய கருவிகாரணங்கள் வாய்த்திருத்தலின் என்க.

பேதைமை காரணமாக உயிர் உடலைத் தாங்கியதும் அதற்குச் செய்கை முகிழ்க்கிறது. அச்செய்கை இறைவழி நிகழின், பிறவியொழியும். இல்லையேல் பிறவி பெருகிக்கொண்டே போகும்.

பிறவி பெருக நேரினும், அப்பொழுதும் என்றுதல் இறைவனடித்துணையாலேயே அப்பிறவியை யொழித்தல் வேண்டும். பிறவி நோய்க்கு உரிய மருந்து இறைவனடியன்றி வேறொன்றில்லை.

பிறவி எப்படிப் பெருகுகிறது? பிறவிக்கு வித்துப் பேதைமை (அவிச்சை). பேதைமையிலிருந்து செய்கை (கர்மம்) பிறக்கிறது. செய்கையிலிருந்து உணர்வும், உணர்விலிருந்து அருவுருவமும் (ரூபாரூபமும்), அருவுருவத்திலிருந்து வாயிலும் (ஞானேந்திரியமைந்தும் மனமும்), வாயிலிலிருந்து ஊறும் (ஸ்பரிஸமும்), ஊறிலிருந்து நுகர்வும் (சுகதுக்க அநுபவமும்), நுகர்விலிருந்து வேட்கையும், வேட்கையிலிருந்து பற்றும், பற்றிலிருந்து பவமும் (கருமத்தொகுதியும்), பவத்திலிருந்து தோற்றமும், தோற்றத்திலிருந்து வினைப்பயனும் (கர்மபலமும்) பிறக்கின்றன.

"பேதைமை செய்கை உணர்வே அருவுரு - வாயிலூறே நுகர்வே வேட்கை - பற்றே பவமே தோற்றம் வினைப்பயன் - இற்றென வகுத்த இயல்பீராறும் - பிறந்தோ ரறியிற் பெரும்பேறறிகுவர் - அறியா ரறியின் ஆழ்நரகறிகுவர்;'—மணிமேகலை: ங0: சஙு - ருO.

கருமத் தொகுதி, பிறவி (தோற்றம்) ஆதல் கருதற்பாலது. "பவமெனப் படுவது கரும ஈட்டம்"; கருமத் தொகுதி காரணமாக வருமே ஏனை வழிமுறைத் தோற்றம்"—மணிமேகலை உ0: கங; ககங.

பிறவி காரண காரியம் ஆகி ஆகி இடையீடின்றித் தொடர்ந்து தொடர்ந்து பெருகிக் கொண்டே போகிறது. ஒரு பிறவியை எடுத்துக் கொள்வோம். அதனை ஆராய்ந்தால் அது காரண காரியமாய்த் தொடர்ந்து வருதலை உணரலாம். அது முற்பிறவியின் காரியமாகவும், வரும் பிறவிக்குக் காரணமாகவும் நிற்றல் விளங்கும். காரண காரியத் தொடர்ச்சியாவது வித்து முளைபோன்றது.

காரண காரியமாய்த் தொடர்ந்து பெருகும் பிறவியைக் கடலென்று சொல்வது மாபு. ஈண்டுக் கடல் என்றது பரப்புக்கும் ஆழத்துக்கும் அறிகுறி. கடல் கரையுடையது. கருமப் பிறவிப் பெருக்கோ கரையற்றது. இரண்டுக்கும் உள்ளவேற்றுமை தோன்றவே "பிறவிப் பெருங்கடல்" என்றார் ஆசிரியர். "பிறவி என்னும் பெருங்கடல்" என்றார் சாத்தனாரும் (மணிமேகலை: கக: உச).

பெருங்கடல் - கரைகாணாக் கடல். "கரைகாணாக் கடலென்பார் 'பெருங்கடல்' என்றார்"—அடியார்க்கு நல்லார்; (சிலப்பதிகாரம்: கடு: உஅ-உரை).

அகன்று பரந்து ஆழ்ந்து கிடக்கும் கடலில் ஒருவர் அகப்பட நேர்ந்தால் அவர் எப்படிக் கரையேறுவர்? அவர்க்கொரு புணைத்துணை வேண்டுமன்றோ? அஃதின்றி அவரால் கரையேறுதல் இயலுங்கொல்? கரையுடைய கடலைக் கடத்தற்கே புணை வேண்டுமெனில், கரைகாணாப் பிறவிப் பெருங்கடலைக் கடத்தற்கு ஒரு புணை வேண்டுமென்று சொல்லத் தேவையில்லை. அப்புணை எது? அதுவே இறைவனடி.

"தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத் தடந்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக், கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற் கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட், டினியென்னே உய்யுமா றென்றென் றெண்ணி அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை,

(பா - ம்) *இறைவனடி சேரா தவர்.

## செத்தவர் பிழைக்கிறார்!

### விஞ்ஞானம் செய்யும் வேடிக்கை

நாய் செத்துப்பிறந்து குட்டியும் போடப்போகிறது!

விஞ்ஞானம் செய்யும் விசித்திரம் தான் என்னே! மாஸ்கோவில் "விஞ்ஞானசபை" ஒன்றிருக்கிறது. டாக்டர் ஸர்ஜி புருய்கா நன்கோ என்பவர் அந்தச் சபையிலே ஆராய்ச்சி செய்கிறார். "இறந்தவரைக் கொண்டுவா! எழுப்பித் தருகிறேன்" என்று அவர் மார்தட்டுகிறார்.

சில வருஷங்களுக்கு முன்னால் லண்டன் "ராயல் இன்ஸ்டிட்யூட்"டில் ஒரு புரொபஸர் மக்களைத் திகைக்கச் செய்தார்; இறந்துபோன நாய் ஒன்றின் இதயத்தை மறுபடியும்துடிக்கச் செய்தார். "ஆஹா! ஆச்சரியம்! ஆச்சரியம்!" என்று மக்கள் பிரமித்துப் போனார்கள். ஆனால் டாக்டர் ஸர்ஜி புருய்கா நன்கோ அவரைவிட ஒருபடி மேலே தாவிவிட்டார். அவர் ஒரு சிறு இயந்திரம் கண்டு பிடித்திருக்கிறார்; அது இதயத்தைப்போலிருக்கிறது. அதைக் கொண்டே எல்லா வேலையையும் செய்கிறார்.

அவர் ஒரு நாயைப் பிடித்தார்; அதன் தலையை வெட்டினார்; அதைத் தம் இயந்திரத்துடன் பொருத்தினார். துண்டிக்கப்பட்ட அத்தலையை அவர் ஆறுமாதம் உயிரோடுவைத்திருந்து காட்டினார். செயற்கை முறையால்அந்த இதயத்துக்கு அவர் இரத்தம் பாய்ச்சினார்.

அடுத்தபடியாக அவர் வேறொரு காரியம் செய்தார். இறந்து சிறிது நாள் சென்ற ஒரு நாயின் தலையை வெட்டி அத்துடன் அக்கருவியைப் பொருத்தினார். அப்பொழுது அத்தலைக்கு உயிர்வந்தது. இரத்த ஓட்டம் ஆரம்பித்தது.பிறகு செத்த ஒருநாயின் உடலில் அக்கருவியைப் பொருத்தினார். இறந்த நாய் பிழைத்து விட்டது. அவருக்காக அரசாங்கம் தனியாக ஒரு ரஸாயனசாலை கட்டிக்கொடுத்திருக்கிறது. அதிலே ஐந்துநாய்கள் இருக்கின்றன. அவையாவும் புனர் ஜன்மம் எடுத்தவைகளே! தேவகா என்பது ஒரு பெண் நாய். அதுவும் புனர் ஜன்மம் எடுத்தது. அதற்கு ஒருநாய் கணவனாக வாய்த்தது. அதுவும் இறந்து பிழைத்த நாயே! இப்பொழுது தேவகா கர்ப்பமாயிருக்கிறது; இன்னுஞ்சில நாளில் குட்டி போடும்! "பிராணிகளிடத்தில் நாம் நடத்திய பரிசோதனை வெற்றிகரமாக நடந்து விட்டது. இனிமேல் மனிதர்களிடத்திலே ஒரு கை பார்க்கலாம்" என்று அந்த டாக்டர் எண்ணிக் கொண்டிருக்கிறார்.

ஒருமனிதர் இறந்த பிறகு எவ்வளவு நேரத்தில் அவரைப் பிழைக்கவைக்கலாம்? எவ்வளவு காலத்துக்கு மேற்பட்டால் பிழைக்கவைத்தல் முடியாது. என்பது போன்ற விஷயங்களை அவர் ஆராய்கிறார். "அழுது புரண்டாலும் மாண்டார் வாரார்" என்று நினைக்க வேண்டாம். "செத்தவரைப் பிழைக்க வைக்க நானிருக்கிறேன்" என்று இனி டாக்டர்கள் கிளம்பிவிடுவார்கள்.

---

முனைவனே முதலந்தம் இல்லா மல்லற் கரை காட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே.

—திருவாசகம்.

"கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணை யாவது நமச்சி வாயவே"

—தேவாரம்.

"சூழ்கதிர் மதிய மன்ன சுடர்மணிப் பூணினானும், வீழ்தரு கதியி னீங்கி விளங்கு பொன் னுலகத் தய்க்கு, மூழ்வினை தாத்த லானு முணர்வுசென் றெறித்த வானு, மாழ் கடற் புணையி னன்ன வறிவன் சரணடைந் தான்"

—சிந்தாமணி.

"சீப்பரும் பிறவிநீர்க் கடலை நீந்துநற் றேப்பயாந் திருவுரு வென்றிறைஞ்சிடா"

—மேருமந்தர புராணம்: 1201.

எனவரூஉம், ஆன்றோர் மொழிகளை ஊன்றி நோக்குக.

(தொடரும்)

# எதிரொலி

### தவறிவிட்டார்

காங்கரஸின் பலத்தையும் தற்போதைய நிலைமையையும் பார்த்து மெச்சுவதற்கு லார்ட் ஜெட்லந்து தவறி விட்டார்.

—"நியூ அவுட்லுக்"

### மோர் சாப்பிடுங்கள்

பிரதிதினமும் மோர் சாப்பிடுங்கள். அது உடம்புக்கு மிகவும் நல்லது. வழக்கமாக மோர் சாப்பிடுவதால் ஆரோக்கியம் அபிவிருத்தியாகும்; சுகமுண்டாகும்.

—"குட்ஹெல்த்"

### மில் அரிசி வேண்டாம்

நமது தமிழ் நாட்டில் மக்களின் பிரதான உணவு அரிசி. நாம் வம்சபரம்பரையாகக் கைக்குத்தல் அரிசியையே உபயோகித்து வந்தோம். சென்ற இருபத்தைந்து வருஷங்களாகத்தான் ரைஸ்மில்கள் நம் நாட்டில் மலிந்து விட்டன.இனிமேல் அவைகளுக்கு வெள்ளிவிழா கொண்டாடி விடலாம். சர்வ தேசசங்கத்தின் உணவு ஆராய்ச்சிக் கமிட்டி, உணவுப் பொருள்களைமில்லில் குத்துவதைக் கண்டிக்கிறது. நமது நாட்டுமக்கள் ஆரோக்கியமாக வாழ வேண்டுமானால் மில்லரிசியை ஒழிக்க வேண்டும். கைக்குத்தல் அரிசியைச் சாப்பிடவேண்டும்.

—"ஹெல்த்"

### அசெம்பிளித் தலைவர் ஆக்ஷேபிப்பாரா?

நிரந்தரமாகச் சட்டசபையில் ஒரு 'கோறடா'வை நியமித்து அச்சம்பளத்தை வரிகொடுப்போர் தலையில் அரசாங்கம் சுமத்தியிருக்கிறது. அது மட்டுமா? மேலுங் கேளுங்கள். திருவிளையாடலை! சட்டசபையின் உதவிக் காரியதரிசி ஒருவரை மறுபடியும் நியமிக்கப்போவதாகத் தெரிகிறது. இப்பொழுது இந்தியச் சட்டசபைத் தலைவராயிருக்கிறாரே ஸர் அப்துல் ரஹீம்-அவர் தலைமையில் நடத்தப்பட்ட சிக்கனக் கமிட்டி சட்டசபையில் உதவிக் காரியதரிசிக்கு 'டிக்கட்' கொடுத்து விட்டது! அவர் செய்த தீர்மானத்துக்கு விரோதமாகவே அரசாங்கம் அக்காரியதரிசியை மீண்டும் நியமிக்கப்போவதாகத் தெரிகிறது. அதை ஸர் அப்துல் ரஹீம் ஆக்ஷேபிப்பாரா?

—"ஹிந்துஸ்தான் டைம்ஸ்"

### விசிறிகளால் பயனில்லை

இரண்டாம் வகுப்பு, முதல் வகுப்பு ரயில் வண்டிகளில் மின்சார விசிறிகள் பொருத்தப்பட்டிருக்கின்றன. குளிர் காற்று வீசிப் பிரயாணிகளுக்குச் சௌகரியம் செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் இவ்விசிறிகள்பொருத்தப்பட்டிருக்கின்றன. இம்முறையால் வண்டிகளுக்குள் குளிர்காற்று எப்படி வீசும்? வெளியிலிருக்கும் காற்றை அவ்விசிறிகள் உள்ளே இழுக்கவில்லையே; உள்ளேயிருக்கும் காற்றையே அசையச் செய்கின்றன. அதனால் வண்டிக்குள்ளிருக்கும் தூசிகளும், தும்முவதாலும்,இருமுவதாலும் ஒருவரிடமிருந்துவெளிப்படும் வியாதிக்கிருமிகளும் பிறரிடம் பரவுதற்கு அனுகூலம் ஏற்படுகிறது; தொத்து வியாதி பரவ ஏதுவாகிறது. ஆகையால் அவ்விசிறிகளால் நன்மையில்லை.

—"மெடிகல் டைம்ஸ்"

### சந்தேகம் தோன்றிவிடும்

லார்டு ஜெட்லந்து இந்திய அரசியல் சட்டத்தின் 52-வது பிரிவை எடுத்துச் சண்டப்பிரசண்டமாகப்பேசினார்."ஹிந்துக்கள் பெரும்பான்மையா யிருந்தால் முஸ்லிம்களுக்கும் முஸ்லிம்கள் பெரும்பான்மையா யிருந்தால் ஹிந்துக்களுக்கும் தீங்கிழைப்பார்கள். அந்தச் சமயத்தில் கவர்னர் சும்மாயிருப்பது சரியா?" என்று அவர் கேட்டார். நாம் அதற்குப் பதில் சொல்கிறோம். ஒரு காலும் நடைபெற முடியாத காரணங்களைச் சொல்லி நீங்கள் பிரபஞ்சத்தையே கலக்கி விடலாம். "ஒரு ஹிந்து ஒரு முஸ்லிமிடத்தில் இருப்பதைவிட அதிக அன்பாக நான் இருக்கிறேன். அல்லது ஒரு முஸ்லிம் ஒரு ஹிந்துவிடத்தில் அன்பு காட்டுவதைவிட அதிகமாகவே நான் கொண்டுள்ளேன்" என்று ஓர் இங்கிலீஷ்காரன் சொன்னால் அது சுத்த அபத்தமானதாகும். அவன் சுய நலத்தின் பொருட்டு மேற்குறித்த இருவருக்கும் நடுமத்தியிலிருக்க ஆசைப்படுகிறான் என்ற சந்தேகம் தோன்றிவிடும்.

—"டான்"

### கையெழுத்துப் போடவா!

ஸர் கூர்மா வேங்கடரெட்டியார் சென்னை முதன் மந்திரியானார். பிரதிதினமும் நூற்றுக்கணக்கான கடிதங்களில் கவர்னர் கையெழுத்திடவேண்டியிருக்கிறதாம். மந்திரிகளைக் கலந்து ஆலோசியாமல் அவ்விதம் கவர்னர் கையெழுத்திட முடியாதாம். ஆகையினால்தான் அவர் தாம் மந்திரிசபை அமைக்கஒப்புக்கொண்டாராம். ஓஹோ! அப்படியானால் கடிதங்களில் கையெழுத்துப் போடுவதற்காகத்தான் ஸர் கூர்மா பதவி ஏற்றுக்கொண்டார் போலும்! பதவி வேட்டையாடுவதென்றால் வரையறை கிடையாதா? அவர் மந்திரியானதும் திக்விஜயம் செய்யப்புறப்பட்டார். பல ஸ்தலஸ்தாபனங்கள் இந்த நெருக்கடியான நிலைமையில் தைரியமாக முன்வந்து மந்திரிசபை அமைத்தமைக்கு அவரைப் பாராட்டி உபசாரமளித்தன. "நுணலுந்தன் வாயாற் கெடும்" என்ற பழமொழி ஞாபகத்திலிருக்கட்டும்.நாட்டில் மக்கள் இந்த "அற்பாயசு" மந்திரிசபையை வரவேற்கிறார்கள் என்று இந்தியா மந்திரி சொல்லி விடுவார். அதற்குத்தான் இந்த ஸ்தலஸ்தாபனங்கள் செய்யுங் காரியம் சாதகமாகும்.

—"ஹிதவாதா"

### நவராத்திரிக் கொலு!

சமஷ்டியில் சமஸ்தான மன்னர்கள் சேரவேண்டாமென்றுசமஸ்தானப் பிரஜைகள்மகாநாடு தீர்மானித்திருக்கிறது. இந்தியா ஓர் ஐக்கிய தேசமானால் பிரிட்டிஷ் இந்திய அரசியல் வாதிகள் முதலில் சமஸ்தானங்களுக்கு வேண்டியவற்றை அளிப்பார்கள். அக்காலம் வருவதற்குள் சமஸ்தான மன்னர்கள் தங்கள்சமஸ்தானங்களை ஒழுங்காகஅமைத்துக் கொள்வார்களாக. பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தின் ஆக்ஞைக்கும் சமஸ்தானப் பிரஜைகளின் எதிர்ப்புக்கும் இடையில் அவர்கள் திண்டாட நேரும். வேண்டாம். அரசியல் விஷயங்களை விட்டுவிடுவோம்.

சமஸ்தானங்களின் தற்போதைய நிலைமை என்ன? சமஸ்தானங்களில் இருப்பதாகச் சொல்லப்படும் சட்டசபைகள் யாவும் பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள பொம்மை மந்திரிகளை விட மோசம்! நவராத்திரி கொலுப்போலிருக்கின்றன! ஸ்தலஸ்தாபனங்கள் அபூர்வமாயிருக்கின்றன. சமஸ்தான உதவியே அவைகளுக்குக் கிடைப்பதில்லை.

—"டான்"

### ஜனங்களைக் குறைகூற வேண்டாம்!

"இந்த நாட்டில் ஆறு லக்ஷம் குருடர்கள் இருக்கிறார்கள். சரியானபடி காலாகாலத்தில் சிகிச்சை செய்யப்பெற்றிருந்தால் நாலைந்து லக்ஷம் பேருக்குக் கண்குருடாகாமல் தடுத்திருக்கலாம். கிழவர்கள் இறந்து போனால் அவர்களுடைய ஸ்தானத்தில் இளைஞர்கள் வந்து விடுகிறார்கள். ஆகவே ஒவ்வொரு தலைமுறைக்கும் நாலைந்து லக்ஷம் பேர் குருடாகிறார்."

வங்காளத்தைச் சேர்ந்த குருடர் தடுப்புச்சங்கத்தின் வருஷாந்த அறிக்கையில் கர்னல் கிர்வான் மேற்கண்டவிதம் கூறுகிறார்: மூன்றில் இருபாகத்தினர் குருடாவதைத் தடுக்கலாமென்றால் கட்டாயம் அதுபற்றி அரசாங்கம் கவனம் கொள்ளல் வேண்டும். எந்தக் காரியமும் வேகமாக அபிவிருத்தியாகாதிருந்தால் அதற்கு ஜனங்களின் பிற்போக்குத்தனமும், அறியாமையுமே காரணம் என்று சொல்வது நவீன ஆராய்ச்சியாளர் வழக்கம். இதை நாம் ஒப்புக்கொள்ள முடியாது. இந்திய ஜனங்கள் முட்டாள்களல்ல; பிற்போக்காளர்களுமல்ல. அப்படியானால் உண்மையென்ன? உண்மையை மக்களிடம் எவரும் சரியானபடி எடுத்துச் சொல்ல முன் வரவில்லை. கட்டுப்பாடான ஸ்தாபனம் ஒன்று அவ்வேலையை மேற்கொள்ள வேண்டும். அதற்குப்பணம் அவசியம். ஆனால் நம்முடைய அரசாங்க வரவுசெலவுத் திட்டத்தைத் தயாரிப்பவருக்குச் சுகாதார விஷயங்களுக்குப்பணம் ஒதுக்கும் பொழுதுதான் கையில் கட்டெறும்பு கடிக்கிறது! அதிகப்பணம் ஒதுக்குவதில்லை. வரவு செலவு நமது கைக்கு வராதவரை ஒன்றும்செய்ய முடியாது.

—"இந்தியன் மெடிகல் ஜர்னல்"





## 1941-ல் குடியேற்ற நாட்டுப் பதவி

### சென்னை மந்திரிகள் பெயர் கெடும்

### இராஜப் பிரதிநிதி இங்கிலாந்து போவார்

காங்கரஸுடன் ராஜிப் பேச்சு

பண்டித சங்கர சாஸ்திரி என்பவர் பிரபல ஜோஸ்யர். அவர் "பம்பாய் ஸெண்டினல்" பத்திரிகையில் இந்தியாவின் எதிர்கால நிலைமை பற்றி ஓர் ஆருடம் கூறியிருக்கிறார். அதன் சாரம் வருமாறு:—

"சென்னை ஜாதகத்தைக்கவனித்தால் மந்திரிசபை அமைப்பதில் கணக்கற்ற சச்சரவு ஏற்படுமென்று தோன்றுகிறது. மந்திரிகள் கெட்ட பெயர் வாங்கிக்கொள்வார்கள். அதன் பின் வேறு மந்திரி சபை அமைக்கப்படும்.

"ஐக்கிய மாகாணத்தில் மந்திரிசபை அமையாது. அப்படி அமைக்கப்பட்டாலும் அற்பாயுளில் முடியும். இப்படியே பல மாகாணங்களில் நிகழும்.

"இந்த நெருக்கடியைத் தவிர்ப்பதற்காக இராஜப் பிரதிநிதி இங்கிலாந்து செல்வார். மகாத்மா காந்தியின் முயற்சியால் காங்கரஸ் தலைவர்களும் கவர்னர்களும் சமரசம் செய்துகொள்வார்கள். ஆயினும்அது நீண்டநாள் நிலைக்காது.

"மகாத்மா காந்தி ஒரு புதிய திட்டத்தை ஏற்படுத்துவார். அதில் பெண் மணிகள் பெரும் பங்கெடுத்துக் கொள்வார்கள். புது மந்திரி சபை அமைப்பதில் காங்கரஸ் தலைவர்களும் முஸ்லிம் தலைவர்களும் ஒன்று சேருவார்கள்.

"1941-ம் வருஷத்தில் நம் நாட்டிற்கு மற்றோர் அரசியல் அமைக்கப்படும். குடியேற்ற நாட்டு அந்தஸ்து அதில் விளங்கும்"

## யோகாப்பியாசம் செய்யும் முதலை

### மூக்கண் படைத்த பிராணி!

மூந்நூறு வருஷம் வாழ்கிறது

செர்ரி கார்டன் என்பவர் ஒரு புத்தகம் எழுதியுள்ளார். அதிலே அவர் சில அபூர்வ பிராணிகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். நியூஜிலந்தில் ஒரு பிராணியிருக்கிறதாம். அதை முன் பக்கம் பார்த்தால் முதலையைப்போ லிருக்கிறதாம்; பின்னாலிருந்து பார்த்தால் பல்லியைப்போ லிருக்கிறதாம். அது சகஜமாக இருநூறு முதல் மூந்நூறு வருஷங்கள் வரை ஜீவித்திருக்குமாம். அவ்வளவு மட்டுமா? அந்தப் பிராணிக்கு மூன்று கண்கள் இருக்கின்றன. சிவ பெருமானுக்கு இருப்பது போல! ஆனால் நெற்றியில் இருக்கும் அந்த மூன்றாவது கண் பார்வைக்குப் பிரயோஜனமில்லை.

அது இரண்டடி நீளமிருக்கிறது. ஒரு நாளைக்கு ஒரு நத்தை அதற்குப் போதுமான ஆகாரம். அந்தப் பிராணி ஒரு வேலையும் செய்வதில்லை. சும்மாயிருப்பதே சுகமென்று அது இருக்கிறது! ஏழு விநாடிக்கு ஒரு முறை அது மூச்சு விடுகிறது. ஒருமணி நேரம்வரை அது மூச்சடக்கிக் கொண்டிருக்குமாம். அப்புறம் என்ன? சரியான யோகாப்பியாஸியே!

கார்டன் அந்தப் பிராணியைப் போட்டோ எடுக்கப் போனார். உடனே ஓரே தாவலாக அது தாண்டிக் குதித்தது. அவ்விதம் ஒரு தரம் அது தாவினால், அதன் ஆயுளில் பத்து வருஷம் குறைந்து போகுமாம்!

அந்தப் பிராணி முட்டை யிடுகிறது. அந்த முட்டை பொரிவதற்கு ஒரு வருஷஞ் செல்லுமாம்! ஆயிரக்கணக்கான வருஷங்களுக்குமுன்பு இருந்தனவாகச் சொல்லப்படும் மிருகங்களிலே உயிருடனிருப்பது இதுவே என்பது அவர் கருத்து.

# கலம்பகம்

திருநெல்வேலியைச் சேர்ந்த திரு. டானியல் தாமஸ் காங்கரஸில் சேர்ந்து விட்டார்.

o o o

பஞ்சாபில் ஆலங்கட்டி மழையால் பெருத்தசேதம். எழுநூறு கிராமங்கள் நாசமாயின.

o o o

இராமேசுவரம் பஞ்சாயத்து சபைக் கட்டடத்தின் மீது தேசியக் கொடி உயர்த்தப்பட்டது.

o o o

பம்பாய் மாகாணத்தில் பஞ்சமஹால் ஜில்லாவில் கொடிய பஞ்சம்; சோற்றுக்கு வழியில்லை. கால்நடைகளில் முப்பது சதவிகிதம் மடிந்தன.

o o o

லண்டனிலுள்ள ஸ்பெயின் உதவிக் கமிட்டிக்கு அகில இந்திய காங்கரஸ் கமிட்டியின் வெளிநாட்டிலாகா ஐம்பது பவுன் அனுப்பியிருக்கிறது.

o o o

பஞ்சாப் அரசாங்கம் உத்தியோகஸ்தர்களின் சம்பளங்களை 15 முதல் 25 சத விகிதம் வரை குறைத்திருக்கிறது. அதனால் ஒரு கோடி ரூபாய் லாபம் வருமாம்.

o o o

'தற்காலிக மந்திரி சபை'யில் தங்களுக்கு நம்பிக்கை யில்லையென்று பம்பாய் சட்டசபை அங்கத்தவர் பலர் கையெழுத்திட்டுக் கவர்னருக்கு ஒரு சுற்றறிக்கை யனுப்பியுள்ளனர்.

o o o

பூனாவிலிருந்து ஹரிஜனக் கோஷ்டியொன்று திருவாங்கூருக்கு விஜயம் செய்யப்போகிறது. பூனா ஹரிஜனத் தலைவர் ராஜபோஜ் அதற்கு மகாராஜாவிடம் அனுமதி கோரியிருக்கிறார்.

o o o

"காங்கரஸ் கேட்ட உறுதிமொழியைக் கவர்னர் அளித்திருக்கலாம். 'அல்பாயசு மந்திரி சபை' அமைத்தது சட்ட விரோதம்" என்று திருநெல்வேலி வக்கீல்கள்சங்கம் தீர்மானித்திருக்கிறது.

o o o

அ. இ. காங்கரஸ் காரியக் கூட்டம் இம்மாதம் 26-ந் தேதி வார்தாவில் கூடுவதாயிருந்தது. ஜவஹருக்கு உடம்பு சுகமின்மையால் அக்கூட்டம் அதே தேதியில் அலகாபாத்தில் நடைபெறும்.

o o o

ஸ்ரீரங்கத்தில் சநாதனிகள் மகாநாடு ஒன்று நடைபெற்றது. அவர்கள் காங்கரஸுக்கு விரோதிகள் அல்லவென்றும் சுயராஜ்யம் வேண்டாமென்று சொல்லவில்லையென்றும் தெரிவித்து விட்டார்கள்.

o o o

திருநெல்வேலியில் கூடிய இந்தியக் கிறிஸ்தவர் சம்மேளனம் இந்தியக் கிறிஸ்தவர்கள் தேசியப் போராட்டத்தில் கலந்துகொள்ளவேண்டுமென்றும் நாட்டிலுள்ள பெரும்பான்மைக் கக்ஷியினருடன் ஒத்துழைக்கவேண்டுமென்றும் தீர்மானித்தது.

o o o

சம்பளப் பட்டுவாடா சட்டத்தை அனுஷ்டிப்பது சம்பந்தமாக ஆமதாபாத் ஆலைத் தொழிலாளருள் சிறு சச்சரவு ஏற்பட்டு மகாத்மாகாந்தியிடம் தூது சென்றனர். மகாத்மா அவ்விஷயத்தை ஆலோசித்துத் தமது முடிவைத் தெரிவிப்பதாகக் கூறியுள்ளார்.

o o o

லையால்பூர் நகரசபை தேசிய விஷயங்களில் எப்பொழுதும் பின்வாங்குவதில்லை. ஹர்த்தால் அனுஷ்டித்ததற்குச் சமாதானம் கூறுமாறு அங்நகரசபையின் உதவிக்கமிஷனர் கேட்டிருந்தார். நகரசபை சமாதானங் கூறியிருக்கிறது. ஹர்த்தால் சட்டவிரோதமானதன்றென அதில்குறிப்பிடப்பட்டுளது.

o o o

லக்ஷ்மணபுரி நகரசபைமீது முதன் முதல் மகாத்மா காந்தி தேசியக் கொடியை உயர்த்தினர். சட்டமறுப்புக்காலத்தில் அது நீக்கப்பட்டது. இப்பொழுது பண்டிதபந்த் மறுபடியும் அக் கொடியைப் பறக்கவிட்டார். அதன் செலவு நூறுரூபாய். அதை அனுமதிக்க நகரசபைக் கமிஷனர் மறுக்கிறார்.

o o o

அகில இந்திய காங்கரஸ் கமிட்டியின் வெளிநாட்டிலாகாவுக்கு ஜப்பான் இந்திய தேசியச் சங்கத்திடமிருந்து ஒரு டிகதம் வந்திருக்கிறது. மகுடாபிஷேகத்தைப் பகிஷ்கரிக்குமாறு பெய்ஸ்பூர் காங்கரஸ் தீர்மானித்திருப்பதால் ஜப்பானிலுள்ள இந்தியரும் முடிசூட்டு விழாவில் கலந்துகொள்ளக் கூடாதென்று அச்சங்கம் தீர்மானித்திருப்பதாகத் தெரிவிக்கப்பட்டுளது.

o o o

ஐக்கிய மாகாணச் சட்டசபையின் காங்கரஸ் கட்சித் தலைவரான பண்டித பந்த் சட்ட சபையிலுள்ள எல்லாக் கட்சியங்கத்தினரும் மே மாதம் 2-ந் தேதி லக்ஷ்மணபுரியில் கூடுமாறு வேண்டி ஓர் அறிக்கை அனுப்பியுள்ளார். 'சட்டசபையைக் கூட்டாமல் வைப்பது அங்கத்தவர் உரிமையைப் பிடுங்குவதாகும். அவ்வுரிமையை விட்டுக்கொடாமல் போராட வாருங்கள்' என்று அவர் அழைத்திருக்கிறார்.

### மகாத்மாவுடன் கலந்து பேசுக

இந்தியா மந்திரிக்கு லோதியன் வேண்டுகோள்

"இப்பொழுது ஏற்பட்டிருக்கும் நெருக்கடியைச் சட்டபூர்வமான அறிக்கைகளால்மட்டும் நிவர்த்திக்கமுடியாது. அரசாங்கத்தவரும், காங்கரஸ்காரரும் அந்தரங்கமாக ஒருவருக் கொருவர் நம்பிக்கை கொள்ளல் வேண்டும். இந்தியா மந்திரியான லார்டு ஜெட்லந்து மகாத்மா காந்தியுடன் கலந்து பேசுவாராகில் நன்மைஏற்படும்" என்று லார்டு லோதியன் சில தினங்கள் முன்பு லார்ட்ஸ் சபையில் பேசினார்.

### 'வெட்ட வெளியில் கூட்டுவோம்'

போட்டி ஜனப்பிரதி நிதிச்சபை கூட்ட முடிவு

மத்திய மாகாண காங்கரஸ் சட்டசபைக் கட்சித்தலைவரான டாக்டர்காரே போட்டிஜனப்பிரதி நிதிச் சபையைக் கூட்டத் தீர்மானித்துவிட்டார். ஆனால் சட்டசபை மண்டபத்தை உபயோகிக்கக் கூடாதென்று கவர்னர் கூறிவிட்டார். "யாரும்இடங்கொடாவிடில்வெட்ட வெளியில் ஜனப்பிரதி நிதிச்சபை (அசெம்பிளி)யைக் கூட்டுவோம்; தலைவரைத் தேர்ந்தெடுப்போம். மந்திரி சபைமீது நம்பிக்கை யில்லாத் தீர்மானங் கொண்டு வருவோம்" என்று அவர் கூறுகிறார்.

### ஈ பிடிக்கும் சுண்டெலி

லண்டனிலிருந்து வெளியாகும் 'டைம்ஸ்' பத்திரிகையின் நிருபர் பின் வருமாறு எழுதுகிறார்:—

சில நாள் முன்பு நான் என் மனைவி, என் மகன் ஆகிய மூவரும் 'டீ' சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். அப்பொழுது ஒரு சுண்டெலி ஓடி வந்து ஒரு ஈயைப் பிடித்தது; உடனே ஓடிப் போயிற்று; மறுபடியும் சில விநாடிக்கெல்லாம் திரும்பி வந்தது; மற்றோர் ஈயைப் பிடித்து வாயில் போட்டுக் கொண்டது. அது ஈ பிடிக்கும்பொழுது பார்க்க வேண்டுமே நாம் கையால் பூப் பறிப்பதுபோல அது ஈ பிடித்தது. நாங்கள் 'களுக்'கென்று சிரித்தோம்: சுண்டெலி ஓடிவிட்டது. அப்புறம் வரவேயில்லை. அதற்கு வெட்கம் வந்துவிட்டது போலும்!

## "உறுதி மொழியில் தயக்கமேன்?"

### "வளரவிட்டால் நிலைமை மோசமாகும்"

சென்னைப் பிரமுகர் அறிக்கை

சென்னைப் பிரமுகர்கள் எல்லாரும் சேர்ந்து ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர். தற்போதைய நெருக்கடியை எப்படியாவது பரிகரிக்க அவர்கள் வேண்டுகிறார்கள். நிலைமையை வளரவிட்டால் மோசம் வந்துவிடுமென்று அவர்கள் பயப்படுகிறார்கள். "ஸர் ஸாமுவேல் ஹோர் கூறியுள்ளபடி கவர்னர்கள் தங்கள் விசேஷ அதிகாரங்களை உபயோகிக்க மாட்டார்கள் என்று உறுதிமொழி யளிக்க அரசாங்கம் தயங்குவதேன்?" என்று அவர்கள் கேட்கிறார்கள். நாட்டுமக்கள் காங்கரஸையே நம்பி ஆதரித்திருக்கும்பொழுது காங்கரஸ் கேட்டதைக் கொடாதிருப்பது தவறு என்று அவர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள்." "சிறுபான்மை யோருக்குக் காங்கரஸ் தீங்கிழைக்காது என்று மகாத்மா சொல்லி விட்டாரல்லவா? இனி உறுதிமொழி கொடுத்தால் என்ன நஷ்டம்?" என்று அவர்கள் சொல்கிறார்கள்.

"ஒரு நீதிச்சபை அமைக்குமாறு மகாத்மா கேட்டிருக்கிறார். அதற்கு அரசாங்கம் இணங்காது. அப்படியானால் அவ்விஷயத்தைச் சமஷ்டி நீதிபதிகளின் தீர்ப்புக்கு விடலாம். உறுதிமொழி கேட்பது சரியன்று என்று அவர்கள் தீர்ப்புக் கூறினால் மகாத்மா அதை ஒப்புக்கொள்வார் என்று நாங்கள் நம்புகிறோம். அப்படிக்கின்றி உறுதிமொழி கொடுக்கலாமென்று தீர்ப்பளித்தால் அதனால் நஷ்டம் ஒன்றுமில்லை. அரசியல் சரிவர நடத்தப்படும். எப்படியும் நெருக்கடியைத் தவிர்க்க வேண்டும். நெருக்கடியை வளரவிட்டால் மோசம்வரும்." என்று அவ்வறிக்கை மேலுங்கூறி முடிகிறது. அவ்வறிக்கைபற்றிக் கல்கத்தாவிலிருந்து வெளிவரும் "அமிர்தபஜார் பத்திரிகை" பின்வருமாறு எழுதுகிறது:—

"காங்கரஸ் செய்யக்கூடியது என்ன இருக்கிறது? புரொபஸர் கீத்போன்ற அறிஞர்களே காங்கரஸ் கேட்டது நியாயம் என்று சொல்லிவிட்டார்கள். ஆகையால் இந்த நெருக்கடிக்குக் காரணமான அரசாங்கமே இதை நிவர்த்திக்க வேண்டும். அரசாங்கம் இதற்குச் செவி சாய்க்குமா?"

நீதிச்சபை நியமிப்பது முன் ஏற்பட்டவழியே என்பதை வலியுறுத்தி மகாத்மா காந்தி ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

## பிரெஞ்சிந்தியாவில் எட்டு மணி நேர வேலை

### தொழிலாளர்க்குப் புதுச் சட்டம்

பிரெஞ்சிந்தியத் தொழிலாளர் சம்பந்தமாகச் சில புதுச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. இப்பொழுது பிரெஞ்சிந்தியத் தொழிலாளர் ஒன்பது மணி நேரம் உழைக்கிறார். அது எட்டு மணி நேரமாக்கப்பட்டது. அடுத்த ஜனவரி முதல் இச்சட்டம் அமுலுக்கு வரும்.

## ஜல்லிக்கட்டில் விபத்து

### ஒருவர் மாண்டார்

திருமங்கலத்துக்கு அருகிலுள்ள சோலைப்பட்டியில் ஜல்லிக்கட்டு (எருதுச் சண்டை) நடைபெற்றது. ஒரு வேப்பமரத்தின் பேரில் 20 பேர் நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தனர். மரத்தடியில் 50 பேர் நின்றனர். திடீரென்று மரக்கிளை முறிந்தது. ஒருவர் மாண்டார்; முப்பது பேருக்குக்காயம்.

# குளக்கரைப் பேச்சு

நேற்று மாலை வழக்கம்போல உபாத்தியாயர், சுப்புராயர், உள்ளூர்க் கணக்கப்பிள்ளை, முதலியார் முதலியோர் குளக்கரையில் உட்கார்ந்திருந்தனர். அப்பொழுது இராமஸ்வாமி சாஸ்திரியார் 'குடுகுடு' வென்று ஓடிவந்தார்.

### மெழுகு பொம்மைகள்

"மெழுகு பொம்மைகள் ஸ்வாமி; மெழுகு பொம்மைகள்" என்று கூவினார் அவர்.

"எங்கே ஸ்வாமி? எங்கே" என்று கேட்டார் உபாத்தியாயர்.

சாஸ்திரியார் சொல்கிறார்:—

"நமது மாகாண மந்திரிசபை இருக்கிறதே அது மெழுகு பொம்மை சபை! எதற்காக அப்படிச்சொன்னேன் தெரியுமா? கோடைக்காலம் வந்து விட்டதல்லவா! சென்னை அரசாங்கம், மந்திரிசபை முதலிய சகலமும் 'ஊட்டி'க்குப்போய் முகாம் போட்டுவிட்டன. உதகமண்டலம் மலைப்பிரதேச மல்லவா! சென்னையில் உஷ்ணமதிகம். எனக்கு ஒரு சந்தேகம் பலமாக ஏற்பட்டுவிட்டது. இந்த மந்திரிசபை மெழுகு பொம்மை சபையென்று நினைக்கிறேன். வெயிலில் உருகிப்போய் விட்டால் என்ன செய்வது என்று பயந்துகொண்டு குளிர்ச்சியுள்ள இடமான உதகமண்டலத்துக்குப் படையெடுத்துவிட்டன போலும்."

### எதைத் திறப்பது ?

"ஆமாம்! நமது முதன்மந்திரி இருக்கிறாரே. ஏதாவது சங்கம், பாலம், கட்டிடம் முதலியவற்றைத் திறந்து வைக்கக்கூடாதோ. அப்படி யொன்றும் இதுவரை திறந்துவைக்கக்காணோமே!" என்று கேட்டார் முதலியார்,

"எதைத்திறப்பது? இனிமேல் வாயைத்திறக்க வேண்டியதே! திறந்து வைப்பதற்கு ஒன்றும் அகப்படவில்லை! திறந்துவைக்க வேண்டியவற்றையெல்லாம் அவர் ஆக்டிங் கவர்னராயிருந்த பொழுதே திறந்து வைத்துவிட்டார்" என்றார் சாஸ்திரியார்.

"நமது மாகாண மந்திரிசபை வெயிலுக்குப் பயந்துகொண்டு மலைக்குப் போய்விட்டதல்லவா? ஐக்கிய மாகாண மந்திரிசபை இந்த வெயிலுக்கு அஞ்சவில்லை; மலைக்கு ஓடிப்போகவில்லை. கல்லுப் பிள்ளையார்போல இருந்த இடத்தைவிட்டு நகரமாட்டேன் என்கிறது. 'வெயிலாவது! கியிலாவது! எங்களை அந்த வெயில் என்ன செய்யும்? என்று அவர்கள் சொல்வதாகக் கேள்வி' என்றார் சுப்புராயர்.

### மூக்கு ஜலம் குடித்தது !

"ஆமாம் சுப்புராயரே! சென்னை, மயிலாப்பூரில் கபாலீச்சுவரர்க்கு உற்சவமாமே!" என்று கேட்டார் முதலியார்.

"ஆமாம்! ஆமாம்! அந்த உற்சவ சம்பவங்களைச் சொல்லவேண்டியதே ஏன் முதலியாரே! நீர் ஏன் 'ஞொண ஞொண' வென்று பேசுகிறீர்? உடம்பு சரியில்லையோ!" என்றார் சுப்புராயர்.

"ஆமாம்! சுப்புராயரே! கோடைக்கால மல்லவா? என்னுடைய மூக்குக்குத் தாகம் உண்டாய்விட்டது! என்னைக் கேளாமலே அது ஜலத்தை அள்ளி அள்ளிக் குடித்துவிட்டது. அப்புறம் என்ன தெரியுமா? 'ஐஸ் கிரீம்' போல அந்த ஜலம் மூக்குக்குள்ளே இருக்கிறது" என்று சொல்லி 'ஞொர்' என்று மூக்கை உறிஞ்சினார் முதலியார். இதற்குள் சாஸ்திரியாருக்குக் 'குஷி' பிறந்துவிட்டது.

"வந்திடுங்கள் திருநாளைக்கு—
மச்சான் மச்சான்
வந்திடுங்கள் திருநாளைக்கு—
வாழைமட்டைப் பூசைவாங்க
வந்திடுங்கள் திருநாளைக்கு"

என்று பாடினார் அவர். உடனே கணக்கப்பிள்ளைக்குக் களிப்பேறிவிட்டது.

"நான்வல்லே திருநாளைக்கு
மச்சான் மச்சான்
நான் வல்லே திருநாளைக்கு
கண்டை போட்ட வேட்டியில்லே
கையிலே பூட்டச் சங்கிலியில்லே
நான் வல்லே திருநாளைக்கு"

என்று அவர் பாடினார்.

"ஹஹ் ஹஹ் ஹஹ் ஹாஹா" என்று எல்லாரும் சிரித்தனர். சுப்புராயர் சொல்கிறார்:—

### கண்கொள்ளாக் காட்சி

"மயிலாப்பூரில் கபாலீச்சுவரர் கோயிலில் உற்சவம். கண் கொள்ளாக் காட்சி! கண் கொள்ளாக் காட்சி! கூட்டம் சொல்ல முடியாது. திருவிடைமருதூர் வீராசாமி பிள்ளை நாகஸ்வரம் பிரம்மானந்தம்..............." என்று சொல்லிக்கொண்டிருக்கையில் சாஸ்திரியார் இடைமறுத்து,

"ஆஹா வீராசாமியா! தோடி ராகம் அவர் பாடவேணும் கேட்கவேணும் ஸ்வாமி! பிரும்மானந்தம் போங்கள். இழைத்து உருக்கிக் கொட்டிவிடுவார் 'மன்னர்'!" என்று தம் மதிப்புரையை வெளியிட்டார்.

"ஓதுவா மூர்த்திகள் தேவார பாராயணம். பிராம்மணர்கள் வேத பாராயணம். சுவாமியை எழுந்தருளச்செய்து வீதியில் கொண்டுவருகையில் பார்க்க வேண்டுமே.!

'பார்க்கப் பார்க்கத் திகட்டுமோ
உந்தன் பாததரிசனம்'

என்று பாடத்தோன்றும். காந்த விளக்குகளின் ஒளியும், தீவர்த்திகளின் உஷ்ணமும், வாண வேடிக்கைகளின் புகையும் வெகு ரம்மியம்! வெகு ரம்மியம்.

### சுவாமிக்கு அழகு காட்டவா ?

"அதற்கப்புறம் என்ன தெரியுமா? கோயிலுக்குப் போகும் பொழுதுதான் ஆண் பிள்ளைகளும் சரி, பெண் பிள்ளைகளும் சரி, அழகு செய்துகொள்வார்கள். முகத்தைப் பத்துமுறை சோப்புப் போட்டுத் தேய்த்துப் 'பவுடர்' போட்டுப் பொட்டிட்டுக் கொள்வார்கள். எனக்கு என்ன யோசனை தோன்றுகிறது தெரியுமா? ஒருகால், கோயிலுக்குப்போகும் இவர்கள் தங்கள் அழகை சுவாமிக்குக் காட்டி ஏதாவது வாங்கிக்கொண்டு வரலாம் என்று நினைக்கிறார்கள்; சுவாமியை ஏமாற்றிவிட நினைக்கிறார்கள் என்பதே. சுவாமிக்கு அழகு காட்டப் போகிறார்களோ அல்லது அங்கு வருகிறவர்களுக்கு அழகு காட்டப் போகிறார்களோ! அது அந்த ஆண்டவனுக்கே வெளிச்சம்.

### சுவாமிக்கு 'லாரி'

"அடுத்தபடியாக சுவாமியின் வாகனங்கள் எல்லாம் பெரியவை. அவற்றின் மீது சுவாமி ஆரோகணிப்பார். சுவாமியுடன் குருமார் ஒருவர், பரிசாரகர், குடை தாங்குவோர் இருவர், ஒரு சிறு பையன் ஆகிய இந்த ஐவரும் உட்கார்ந்திருப்பர். இவ்வளவு சுமையும் அந்த வாகனம் தூக்கும் பதினறு ஆட்கள் தோளில்! பேஷ்! பேஷ்! பேசாமல் ஒரு மோட்டார் லாரி வாங்கி அதில் வாகனத்தை வைத்துச் சுவாமியையும் அலங்கரித்து இன்னும் எட்டுப் பேரை வேண்டுமானாலும் ஏற்றிக்கொண்டு சுவாமியை எழுந்தருளப் பண்ணினால் நலமாயிருக்கும்.

'வேல் முருகா! வேல் முருகா'

"சுவாமிக்கு முன்னால் ஒருவர் ஏகப்பட்ட ருத்திராக்ஷ மாலைகளை அணிந்துகொண்டு!

"வேல் முருகா! வேல்முருகா
வேல்முருகா! வேல்முருகா"

என்று சொல்லிக் குதிப்பார். அவரைச் சுற்றிப் பத்துப்பேர் நின்றுகொண்டு அவர் பாடி முடித்ததும்,

"வடிவேல் முருகா,
வேல்முருகா வேல்முருகா,
சரவண பவகுஹ
வேல்முருகா, வேல்முருகா.

என்று முறை வைப்பர். இருந்தாற்போலிருந்து முதலில் பாடுபவர் 'திம் திமிதிம்' என்று குதிப்பார். அதைப் பார்த்துக்கொண்டு நூறுபேர் நிற்பர். எல்லாரும் சேர்ந்து குதித்தால் மிக அபூர்வமாயிருக்கும் என்று நான் சிபார்சு செய்கிறேன்.

### 'போ போ போ போ' என்று கூத்தாடுவோர்கள்

"கடைசியில் ஒரே ஒரு விஷயம் பாக்கி. பத்துப்பேர் நின்றால் அவ்விடத்தில் 'செக்கலைப் புலி' ஒன்றைக்காணலாம். நான் சொல்வது புரிகிறதா இல்லையா! போலீஸ்புலியைச் சொல்கிறேன். சுவாமிபுறப்பட்டதும் புற்றிலிருந்து ஈசல் கிளம்புவது போல ஸார்ஜண்டுகளும், செக்கலைப்புலிகளும் சுவாமிக்கு முன்னால் வருவார்கள். இவர்களைத் தெரிசனம் செய்யாமல் சுவாமி தெரிசனம் செய்ய முடியாது. ஜனங்கள் தங்கள் பாட்டில் அமைதியாகப் போய்க்கொண்டேயிருப்பார்கள். நடுவில் இந்தச்செக்கலைப்புலிகள் குறுக்கும் நெடுக்கும் பாய்ந்து 'போ போ போ போ' என்று கூத்தாடுவார்கள். நம்முடைய ஜனங்களுக்குத்தான் 'சிவப்பைக்' கண்டால் பயமாயிற்றே! ஒன்றன் மேலொன்று விழுவது போல் நெருக்கித்தள்ளிக்கொண்டு போவார்கள். இதில் சண்டை அடி, குத்து, குஸ்தி எல்லாம். உடனே போலீஸ் பந்தோபஸ்து. இப்பொழுது போலீஸ் பந்தோபஸ்து என்றால் புரிகிறதா விஷயம்!

### வாலிபர்களைப் பிடியுங்கள்

நான் என்ன சொல்கிறேன். அடுத்த வருஷம் முதல் இந்தப்போலீஸ் பந்தோபஸ்தே வேண்டாம். வேலையுமின்றி, சோற்றுக்குவழியுமின்றி எவ்வளவோ வாலிபர்கள் இருக்கிறார்கள். அவர்களில் தேவையானவர்களைப் பிடியுங்கள். 'உற்சவம் முடியுமட்டும் தொண்டனாயிரு. சோறுபோடுகிறேன்' என்றால் 'ஆஹா' என்பார்கள். எங்கே பார்த்தாலும் வரிசையாக நிற்கவைத்து விடுங்கள். அங்கங்கே கூட்டத்தை ஒழுங்கு படுத்தி அனுப்ப அவர்களுக்குச் சொல்லி விடுங்கள். அவ்விதம் செய்தால் 'எவ்வளவோ விஷயங்களில் பலனுண்டு. ஆயிரம்பேர் பத்துநாளைக்காவது வயிறு நிறையச்சாப்பிடுவார்கள். கோயிலதிகாரிகள் எல்லாரும் இம்முறையை அனுஷ்டிக்கவேண்டும். சமீபத்திலே இராமகிருஷ்ண நூற்றாண்டு விழா கல்கத்தாவில் நடைபெற்றதே. அதற்கு லக்ஷக்கணக்கான ஜனங்கள் வந்தார்கள். ஆனால் ஒரு போலீஸ்காரனைக்கண்டு பிடிக்க முடியவில்லை. எல்லாவற்றையும் தொண்டர்களே கவனித்துக் கொண்டார்கள்."

இவ்விதம் பேசிக்கொண்டே எல்லாரும் எழுந்து சென்றனர்.

—கமலம்

## வித்வானின் சவம் நாறவேயில்லை

### ரோஜாப்பூ வாடவேயில்லை

#### வருடங்கள் பலவாயின

1881-ம் வருஷத்தில், அதாவது ஐம்பத்தாறு வருஷங்களுக்கு முன்பு ருஷ்யாவில் ஒரு சங்கீத வித்வான் இறந்து போனார். அவரது உடல் புதைக்கப்பட்டது. 1934-ம் வருஷம் அவரது சமாதி கலைக்கப்பட்டது. அவரது சமாதிப் பெட்டி திறந்து பார்க்கப்பட்டது. அப்பெட்டியில் சுகந்தமான பொருள் ஏதும் வைக்கப்படவில்லை. அப்படி யிருந்தும் அச்சவத்தில் துர்நாற்றம் வீசவில்லை. சமாதிக்கிரியையின்போது அப்பிணத்தின் மார்புமீது வைக்கப்பட்டிருந்த ரோஜா புஷ்பங்கூட வாடவில்லையென்றால் மேலும் சொல்வானேன்! மூன்று வருஷங்களாக விஞ்ஞானிகள் இவ்விஷயத்தின் மர்மத்தை அறிவதற்குப்படாத பாடும் பட்டார்கள்; பலன் ஒன்றுமில்லையென்று இப்பொழுது கையை விரித்துவிட்டார்கள்.

## பிரிட்டனில் நிர்வாண இயக்கம்

### வரவரப் பெருத்துவிட்டது !

#### நிர்வாண மகாநாடு ஒன்று நடைபெறும்

#### மேலும் அபிவிருத்தி செய்ய யோசனை

பிரிட்டனில் நிர்வாண இயக்கம் அதிவேகமாகப் பரவிக்கொண்டு வருகிறது. இன்னும் சிறிது நாளில் லண்டனில் பிரிட்டிஷ் நிர்வாணிகள் மகாநாடு ஒன்று நடைபெறப்போகிறது. 1937-ம் வருஷத்தில் நிர்வாண இயக்கத்தை மேலும் பரவச் செய்ய அப்பொழுது ஆலோசிக்கப்படும். அம்மகா நாட்டின் பிரதிநிதிகள் இருபது அறைகளுள்ள ஒரு மாளிகையில் கூடுவார்கள்; குடிப்பார்கள்; குதிப்பார்கள்; விளையாடுவார்கள்; பாடுவார்கள்; நாட்டிய மாடுவார்கள்; வாதம் புரிவார்கள். எல்லாம் நிர்வாணமாகவே நடைபெறும்! ஆடை யுடுத்துகிற பேச்சே அங்கிராது!

நிர்வாண இயக்கம் பிரிட்டனில் முப்பது இடங்களில் இருக்கிறது. அதை மேலும் அதிகரிக்க யோசிக்கப்படுகிறது என்று "டெய்லி ஹெரால்டு" பத்திரிகைச் செய்தி கூறுகிறது.





# மணித்திரள்

தினமும் சராசரி 27,50,000 டன் மழை பூமியில் பெய்கிறதாம்.

*

பிரிட்டனில் மொத்தம் 20,165 ரயில்வே இஞ்சின்க ளிருக்கின்றன.

*

ஒரு தேனீ இராணி பருவமொன்றுக்கு ஒரு லக்ஷம் முட்டை யிடுகிறது.

*

நல்ல ஜாதித் தென்னைமரம் ஒரு பருவத்தில் 40 காலன் இளநீரைத் தருகிறதாம்.

*

பூமியிலிருந்து ஏழு மைல் உயரத்துக்கு மேலே போனால் சுவாசிக்க முடியாதாம்.

*

ஆலங்கட்டி மழை இருக்கிறதே! அது விநாடிக்கு 70 அடி வேகத்தில் பெய்கிறதாம்.

*

'காட்' என்பது ஒருவகை மீன். அம்மீன் ஒன்றின் வயிற்றில் எண்பது லக்ஷம் முட்டைக ளிருந்தனவாம்.

*

பிரிட்டிஷ் வியாபாரிகள் விளம்பரத்திற்கென்று வருஷத்தில் ஏழு கோடி பவுன் செலவு செய்கிறார்கள்.

*

கொசுவுக்குப் பல் உண்டா? உண்டு. 22 பற்கள் உண்டு. அவற்றைப் பூதக் கண்ணாடி மூலமாகவே பார்க்கமுடியும்.

*

பிரிட்டனிலுள்ள ரயில்வே இஞ்சின்களை ஓட்டுவதற்கு வருஷத்துக்கு ஒரு கோடியே நாற்பது லக்ஷம் டன் நிலக்கரி வேண்டி யிருக்கிறதாம்.

*

ஐஸ்லந்தில் ஒவ்வொருவரும் தமக்குத் தேவையான பொருள்களைத் தாமே செய்துகொள்ளல் வேண்டும். வியாபாரம், தொழில் முதலியன அங்கில்லை.

*

அலக்ஷியமாக விளக்குகளை எரிய விடாதேயுங்கள். லண்டனில் அவ்விதம் விளக்குகளை எரிய விட்டதால் ஒரு வருஷத்துக்கு 1294 தீ விபத்துக்கள் ஏற்பட்டன.

*

உலகில் இருபத்தைந்து கோடி மக்கள் பிரதி வாரமும் சினிமாவுக்குப் போகிறார்களாம். அமெரிக்க ஐக்கிய நாட்டில் மட்டும் ஏழரை கோடி மக்கள் ஒவ்வொரு வாரமும் சினிமாவுக்குப் போகிறார்கள்.

*

உலகத்து மக்கள் சினிமா பார்ப்பதற்காக மாத்திரம் வருஷம் ஒன்றுக்கு 24 கோடி பவுன் செலவழிக்கிறார்கள். அப்பணத்தை ஓர் அடிக்கு நாலு ஷில்லிங் வீதம் வைத்தால் சந்திரமண்டலம் வரை பரப்பக்கூடுமாம்.

*

சென்ற வருஷம் ஹங்கேரி நாட்டில் 79,905 பெண்களுக்குக் கலியாணங்கள் நடைபெற்றன. அவர்களில் 3315 பெண்கள் 17 வயதுக்குட்பட்டவர்கள். 1325 பெண்கள் ஐம்பது வயதுக்கு மேற்பட்டவர்கள். இவர்கள் நல்ல வாலிப வயதினரையே மணந்திருக்கிறார்கள்.

*

மனிதருடைய இதயமானது ஆறு அங்குல நீளமும், நாலு அங்குலக் குறுக்களவும் உள்ளது. அது நிமிஷத்துக்கு 70 தரம் துடிக்கிறது. அதாவது அதன் துடிப்பு ஒரு மணிக்கு 4,200 தடவையும், நாளொன்று ஒரு லக்ஷம் தடவையும், இணைத்துக்கு 36,81,720 தடவையும் தன்னுருவாது ஆயுட்காலத்தில் முப்பது வே[illegible]யும் ஆகும்.

# உலகக் காட்சி

### காகிதக் கைக்குட்டைகள்

இதுவரை காகிதத்தாலான கைக்குட்டைகளைப்பற்றிக்கேள்விப்பட்டிருக்கிறீர்களா? கேள்விப்படாவிட்டால் இப்போது சொல்வதையாவது கேளுங்கள். பலர் காகிதத்தாலான கைக்குட்டைகளையே உபயோகிக்கிறார். முன்னர் அவை சலவைக்குப் பின்பயன்படா. இப்போது வரும் கைக்குட்டைகளோ சலவைக்குப் பின்னும் உபயோகப்படுகின்றனவாம்.

காகிதக் கைக்குட்டைகள் பல உள்ள அட்டை ஒன்று விற்கிறது. அதனின்றும் ஒவ்வொன்றாகக் கைக்குட்டைகள் கிழித்துக் கொள்ளப்படுகின்றன. அவை அழுக்கானதும் சலவை செய்யப்படுகின்றன. சலவைக்குப் பின்னரே அவை மிருதுவாகவும், வழவழுப்பாகவும் இருக்கின்றனவாம்.

* * *

### மோட்டாரில் ரேடியோ

மோட்டார் ஓட்டுபவர்களும் அதன் உள்ளே இருப்பவர்களும் வெளியே என்ன நடக்கிறதென்பதை அறிய வேண்டுவது அவசியமாகும். ஏன்? அப்போதே மோட்டார் பிரயாணத்தின் பெருமை விளங்கும். இவ்வசதிகளெல்லாம் ஏற்படத் தற்காலத்தில் மோட்டாரில் ரேடியோ கருவிகள் அமைக்கப்படுகின்றன. இதனால் மோட்டாரில் இருப்பவர்களுக்கும் வெளியே இருப்பவர்களுக்கும் எவ்விதத் தொந்தரவும் இல்லை. இக்கருவி எம்முறையால் இயங்குகிறதென்பதை யறியப் பலர் விரும்பலாம். செவிடரும் கேட்கும்படி புதியதாக ஆகாயத்திரை சம்பந்தமான ஒரு கருவி கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அம்முறையே இக்கருவியிலும் பின்பற்றப்பட்டிருக்கிறது.

* * *

### மண்டையோட்டுச்சாலை ?

புத்தகசாலை என்றால் நீங்கள் என்ன நினைத்துக்கொள்வீர்கள். அடுக்கடுக்காகப் புஸ்தகங்கள் அடுக்கிவைக்கப்பட்டிருக்கும் ஓர் இடத்தை நினைத்துக் கொள்வது வழக்கம். ஆனால் இக்காலத்தில் புத்தகசாலை பொதுப்பெயராக வழங்கப்படுகிறது. கிராமபோன் புத்தகசாலை (கிராமபோன் லைபரரி) என்றால் கிராமபோன் தட்டுகள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் இடம் குறிக்கப்படுகிறது. இவ்விதம் பல இடங்கள் கூறப்படுகின்றன. ஆனால் இதுவரை நீங்கள் கேட்டறியாத அதிசய புத்தகசாலை யொன்று அமெரிக்காவிலுள்ள நியூயார்க் நகரத்தில் இருக்கிறது. இது புத்தகசாலை யென்று அழைக்கப்பட்டாலும் புத்தகசாலையன்று, மண்டை ஓட்டுச் சாலையே.

இவ்விடத்தில் பதின்மூன்று ஆயிரம் மண்டை ஓடுகள் சேர்த்துவைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றிற்கும் புத்தகங்களைப்போலவே பெயர்களும், எண்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவை பலகைகள்மீது ஜாக்கிரதையாக அடுக்கிவைக்கப்பட்டிருக்கின்றன.

* * *

### தப்பு எழுத்துக்களைக் காணும் வழி

உலகத்தில் வரவர பொய்ப்பித்தலாட்டங்கள் அதிகமாகின்றன என்று பலர் கூறுகின்றனர். உலகத்தில் எவ்வளவு பித்தலாட்டங்கள் ஏற்படுகின்றனவோ அவ்வளவையும் கண்டுபிடித்தற்குரிய கருவிகளும் பக்கத்தில் கண்டுபிடிக்கப்பட்டுக் கொண்டேயிருக்கின்றன. உதாரணமாக, இக்காலத்தில் பொய்க் கையெழுத்துக்களும், முன்னரேஎழுதப்பட்ட தஸ்தாவேஜுகளில் புதிதாக வேண்டியவற்றைப் புகுத்தலும் அதிகமாய்விட்டன. இவ்வாறு செய்யப்படும் தப்புக் கையெழுத்துக்[illegible]ம், எழுதப்பட்ட மையின் வயதையும் கண்டுபிடிக்கத் தற்போது ஒருபுதிய முறை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

கந்தகசியானிக் திராகப்புகையைச் சந்தேகமுள்ள கையெழுத்துப் பிரதியின் மீது விடவேண்டும். உடனே எழுத்துக்கள் பிரகாசமாகத் தெரிகின்றன. அதனால் எவ்வெவ்வெழுத்துக்கள் முன்னர் எழுதப்பட்டன வென்றும், எவை பின்னர் எழுதப்பட்டன வென்றும் கண்டுபிடிக்கப்படுகிறது. கண்ணுக்குத்தெரியாத நீண்டநாளைய கையெழுத்துக்களைப் படிக்கவும் இம்முறை அனுஷ்டிக்கப்படுகிறது.

* * *

### பன்றியின் பால்

உடல் வளர்ச்சிக்குப் பால் இன்றியமையாதது. இதற்குப் பசுவின்பாலே அதிகமாக உபயோகப்படுத்தப்படுகிறது. வெள்ளாட்டின் பாலையும் பலர் உபயோகப்படுத்துகிறார். இவ்விரண்டு பாலும் கிடைக்காத இடத்தில் என் செய்வது? புட்டிப்பால் உபயோகப்படுத்தப்படுகிறது. அமெரிக்கர் புட்டிப்பாலை உபயோகிக்க விரும்பவில்லை. இதற்கு வேறொரு பாலைக் கண்டுபிடித்திருக்கிறார். இதுவே பன்றியின் பால். பன்றியின் பாலை எவ்வாறு கறக்க முடியுமென்று சிலர் சந்தேகப்படலாம். சந்தேகம் வேண்டுவதில்லை. சொல்வதைக் கேளுங்கள். ஆப்பிரிக்காவில் கினியா என்று ஒரு பிரதேசம் இருக்கிறது. அங்குள்ள பன்றிகள் அதிகபாலைத்தருகின்றனவாம். இப்பன்றிகள் அமெரிக்காவில் வளர்க்கப்படுகின்றன. அவைகளின் பாலையே அமெரிக்கர் விரும்புகிறார். அதில் பசும்பாலைவிட மாமிசச்சத்தும், கொழுப்பும் அதிகமாக இருக்கின்றனவாம். பன்றியின் பாலை வெகு சுலபமாக இயந்திர மூலமாக அவர்கள் கறந்து விடுகிறார்கள். பன்றியின் பால் வேண்டுமானால் இயந்திரம் வேண்டும். நீங்கள் வேண்டுமானால் நம்நாட்டுப் பன்றியின் பாலை உபயோகித்துப் பாருங்கள்.

* * *

### பீர்குடி நிறுத்தம்

இக்காலத்தில் எங்குப் பார்த்தாலும் வேலை நிறுத்தங்கள் நடைபெறுகின்றன. சென்னையில் பஸ் அஸோஸியேஷன்கள் ஏற்பட்டிருப்பதைப் பலரும் அறிவர். இவை ஒருவிதத்தில் வரவேற்கத்தக்கன. ஏன்? வேலையற்ற சில வாலிபர்கள் இதில் இன்ஸ்பெக்டர்களாக வேலை பெறுகிறார்கள். இவ்வித வாலிபர்களில் இருவர் ஒருநாள் ஒன்று சேர்ந்து வேலை நிறுத்தத்தைப்பற்றி யோசித்தார்களாம். இன்ஸ்பெக்டர்களெல்லாரும் சேர்ந்து வேலை நிறுத்தம் ஆரம்பித்து விட்டால் அவர்தம் சம்பளங்கள் உயர்ந்து விடுமென அவர்கள் இருவரும் முடிவு கட்டினார்களாம். அதுபோல வேறோர் அதிசயக் குடி நிறுத்தத்தைக் கேளுங்கள். அமெரிக்காவிலுள்ள இல்லிநாய்ஸ் மாகாணத்தில் பீரின் விலை அதிகமாகி விட்டதாம். அதனால் ஒரு சத்திரத்தில்—சாப்பிடும் நாற்பது பேர் பீர் குடிப்பதில்லை என்று கங்கணம் கட்டிக்கொண்டார். உணவு வகைகளைச் சாப்பிட்ட பிறகு தண்ணீர் அருந்துவதே தவிர அவர்கள் பீர் குடிப்பதில்லையாம். இவர்களை மயக்க இவர்களுக்கு எதிரில் சத்திரச் சொந்தக்காரன் பீர் குடிப்பானும். அப்போதும் இவர்கள் மயங்குவது இல்லை.

* * *

### உடலைப் பெருக்கக் காப்பி

வண்டிச் சக்கரங்களுக்குக் கட்டுகள் விடவேண்டுமென்றால் என்ன செய்யப்படுகிறது? இரும்பாலாகிய கட்டு முதவில் சூடாக்கப்படுகிறது. பிறகு அதைச் சக்கரத்தின்மேல் பொருந்த வைத்துத் தண்ணீர் ஊற்றப்படுகிறது. ஏன் இப்படிச் செய்தல் வேண்டும்? சூடாக்கின உடனே இரும்புச் சட்டம் நீளுகிறது. அதைச் சக்கரத்தின் மேல்வைத்து நீர் ஊற்றுவதால் அது குறுகுகிறது. அதனால் சக்கரத்தை அது இறுகப் பிடித்துக்கொள்கிறது.

ரயில் பிரயாணம் செய்யும்போதும் தண்டவாளங்களுக் கிடையில் சிறிது இடம் விட்டிருப்பதைக் காணலாம். இவ்விடங்கள் எதற்காக? கோடை நாளில் தண்டவாளங்கள் நீளும். அக்காலத்தில் இக் காலி இடங்கள் இல்லாவிடில் தண்டவாளங்கள் ஒன்றை ஒன்று முட்டிக்கொண்டு பெயர்ந்துவிடும். இந்த அபாயத்தைத் தடுக்கவே இப்படிப்பட்ட காலி இடங்கள் விடப்பட்டிருக்கின்றன.

மற்றப் பொருள்களெல்லாம் இவ்வாறு உஷ்ணத்தால் பெருகுவதும் குளிரால் குறைவதுமாக இருக்கும்போது நமதுதேகம் மட்டும் சீத உஷ்ணத்தால் மாறுபடாமல் இருக்குமா? இராது.

இதுபற்றி மேற்கு நாடுகளில் பல ஆராய்ச்சிகள் நடைபெற்றன. இறுதியில் மற்றப் பொருள்களைப் போலவே மனிதனுடைய உடல் உஷ்ணத்தால் பருமனாகிறது என்பது கண்டுபிடிக்கப்பட்டது. பிறகு சிறிது நேரத்திற்கெல்லாம் இது குறைந்துவிடுகிறது. இவ்வாறு பலர் முன்னிலையிலும் அளந்து பார்க்கப்பட்டது. அதனால் காப்பி சாப்பிட்டவுடனே உடல் பெருக்கிறதாம். 'ஐஸ்வாட்டர்' சாப்பிடுவதால் உடல் பருமன் குறைகிறது.

# உதிர்ந்த மலர்கள்

### தராசும் மனிதனும்

கனமுள்ள தராசுத் தட்டு கீழே போகிறது. இலேசான தட்டோ மேலே செல்கிறது. உயர்குணமும் ஒழுக்கமும் உள்ள மனிதன் எப்போதும் பணிவாயும், அன்பாயுமிருக்கிறான். முட்டாளோ அகம்பாவத்தால் கர்வம் படைத்தவனாயிருக்கிறான்.

—ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர்.

* * *

### காதல்

காதல் தெய்வீகமானது; சட்டதிட்டங்களுக்குட்பட்டதன்று. காதல் இல்லாத மணம் அடிமைவியாபாரத்தை ஒப்பதாகும். காதல் சட்டத்துக்கும் உயர்ந்தது. அக்னியைப் போல அது எல்லாவற்றையும் பரிசுத்தம் செய்துவிடும். ஒருத்திக்குத் கணவனிடத்தில் காதல் இல்லாவிட்டால் அவன் தன் கணவனாயிற்றே என்ற எண்ணத்துடன் அவனுடன் சேர்ந்து வாழல் தகாது.

—ஸர் எஸ். இராதா கிருஷ்ணன்.

* * *

### மத நம்பிக்கை

சொந்தமதத்தில் நம்பிக்கை கொள்ளுமாறு உங்கள் குழந்தைகளுக்குச் சொல்லுங்கள். பிறமதங்களைத் தூஷிக்க வேண்டாமென்று கூறுங்கள். ஒழுக்கமும் ஒற்றுமையும் உண்டுபண்ணக்கூடிய விதமாக மதத்தைப் போதியுங்கள்.

—அன்னை வசந்தையார்.

* * *

### பெண்கள் அடிமைகளா ?

புருஷன் ஸ்திரீகளை அடிமைகளாக நினைத்து நடத்தும்வரை சமூகத்தில் சீர்கேடு இருக்கத்தான் செய்யும். பெண்களை ஆண்கள் அடக்கியாளாவிடில் ஒழுக்கக்குறைவும் கற்புக்குப்பங்கமும் ஏற்படும் என்று காரணங்கூறுவது ஒப்புக்கொள்ளக்கூடியதன்று. ஆண்மகனிடம் எத்தகைய ஒழுக்கம் இருக்கிறதோ அத்தகைய ஒழுக்கம் பெண் மகளிடமும் இருக்கும். பெண்களைக் காமக்கருவிகளாக நினைத்து உபயோகிக்கும் மனிதர்களும் இருக்கிறார்கள். அவர்கள் மனிதராயினும் மிருகங்களே.

—ஸர் எஸ். இராதாகிருஷ்ணன்.

எனக்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1937ஞு ஏப்ரல்மீ 23உ

## இங்கிலாந்தும் இந்தியாவும்

இங்கிலாந்து இந்தியாவை ஆளுந் தேசம். இந்தியா இங்கிலாந்தால் ஆளப்படுந் தேசம். இவ்விரு தேசங்களின் தொடர்பால் நலம் எய்துவது எது? இங்கிலாந்தா? இந்தியாவா?

### இந்தியா சந்தை

இந்தியாவை இங்கிலாந்து ஆள்வதால் இங்கிலாந்துக்கும், அதைச் சூழ்ந்துள்ள மற்ற ஐரோப்பிய தேசங்களுக்கும் பல வழியிலும் நலன் விளைந்து வருகிறது. அத்தேசங்களின் தொழிற்சாலைகள் தரும் பொருள்கள் பெரிதும் எங்கே விலையாகின்றன? இந்தியாவிலன்றோ அவை விலையாகின்றன? இந்தியா, மேல் நாட்டுப் பொருள்களின் வாணிபத்துக்கு ஒரு பெருஞ் சந்தையாயிருத்தல் வெள்ளிடைமலை.

### பரதேசிய விருப்பம்

இந்திய மக்கள் சுதேசியப் பற்றின்றிப் பரதேசியப் பற்றில் விழுந்தமையால் அயல் நாட்டு வாணிபத்துக்கு இந்தியா சந்தையாய்விட்டது. இந்தியா சுதேசியத்தை மறந்தது பெருந்தவறு. இந்திய வாழ்வுக்கு வேண்டப்படாத பொருள்களையும் இந்திய மக்கள் விரும்பி வாழ்கிறார்கள். இவ்விருப்பம் அறவே ஒழிந்தாலன்றி இந்தியா நலமுறல் அரிது.

### இங்கிலாந்து இழிந்து வாராது

சுயராஜ்யத்தின் இன்றியமையாமையை இப்பொழுது இந்திய மக்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள்; அவ்வுணர்வைத் தேர்தலில் வாக்களிப்பதன்மூலம்வெளிப்படுத்தி வருகிறார்கள். அதற்குமேல் அவர்களால் ஒன்றுஞ் செய்ய முடிவதில்லை. சுதேசிய வேட்கையில் இந்திய மக்கள் மனம் இன்னும் முற்றும் படியவில்லை. பரதேசிய வீழ்ச்சியும் சுதேசிய எழுச்சியும் சுயராஜ்யத்தின் முகிழ்ச்சி என்பதை மிகச் சிலரே உணர்ந்து நடக்கிறார். இந்நிலையை இங்கிலாந்து நன்கு தெரிந்தே கடனாற்றி வருகிறது. லார்ட் ஜெட்லந்தின் அறிக்கை இங்கிலாந்தின் உள்ளக்கிடக்கையைச் செவ்வனே விளக்கியுள்ளது. இங்கிலாந்து தன் உறுதியிலிருந்து ஓரங்குலங்கூட இழிந்து வருதல் அருமை யென்றே தோன்றுகிறது.

### இனி என் செய்வது ?

காந்தியடிகள் இந்தியாவின் சார்பில் நின்று உறுதிமொழி கேட்டார். அரசாங்கம் இணங்கவில்லை. அடிகள் நீதி விசாரணை கேட்டார். அதற்கும் அரசாங்கம் அசையவில்லை. இனி என்செய்வது? உள்ள வழி இரண்டு. ஒன்று சத்தியாக்கிரக முறையில் ஏதாயினும் போர் தொடுப்பது; அல்லது உறுதிமொழி கேளாது பதவி ஏற்பது.

### போர் !

சத்தியாக்கிரகப் போர் முன்னர் இரண்டு முறை நடைபெற்றது. விளைந்த பயன் என்ன? தேசத்தில் ஒருவித விழிப்பு ஏற்பட்டது. சுதேசியம் ஓங்கி வளர்ந்ததா? இல்லை. சுதேசியம் ஓங்கி வளர்ந்திருந்தால், லார்ட் ஜெட்லந்தின் தொனி வேறு விதமாக வன்றோ பிறந்திருக்கும்? லார்ட் ஜெட்லந்து, மகாத்மாவை மதியாது பேசச் செய்தது எது என்பதைக் கவனித்தல் வேண்டும். இந்திய மக்களின் வாழ்விடைச் சுதேசியம் புகுந்து இரண்டறக் கலந்திருந்தால், லார்ட் ஜெட்லந்து, மகாத்மா காந்திக்குப் பணிந்தே யிருப்பர்.

மூன்றாமுறை போர் தொடங்கினால் எல்லாம் ஒழுங்குபட்டு விடும் என்று சிலர் கருதலாம். சுதேசியம் வாழ்வில் கலக்கு முறையில் போர் நிகழ்ந்தால் பயன் விளையும். அம்முறையில் போர் நிகழுமா? பரதேசியத்துக்குப் பல வழியிலும் அடிமைப்பட்டு வாழ்ந்துவரூஉம் வக்கில் இனம், ஜமீன்தாரர் இனம், வியாபார இனம் முதலியன நன்முறையில்போரை நிகழவிடுமா?

### சுதேசியக் கொலைக் கருவிகள்

நமது அருமை இந்தியத் தேசத்தை இந்நிலைக்குக் கொண்டு வந்த பொறுப்பு வக்கிலினத்தினுடையதே யாகும். அவ்வினத்தார் 'நியாய வரம்புப் போர்' என்றொன்று கொண்டு, சீர்திருத்தங் கேட்டுக்கேட்டு, நாட்டின் இயற்கைக்கு மாறுபட்டபள்ளிக்கூடங்களையும், நீதி மன்றங்களையும், உத்தியோக சாலைகளையும், ஸ்தல ஸ்தாபனங்களையும், வேறு பல அமைப்புகளையும் பெற்றனர். இவ்வமைப்புகள் சுதேசியத்தைக் கொல்லவும், பரதேசியத்தை வளர்க்கவுங் கருவிகளாகத் துணை செய்து வருதல் கண்கூடு. இவைகளால் நாட்டுக் கலைகளும், தொழில்களும், பிறவும் மாண்டன.

### பள்ளி முதலியன

தற்காலப் பள்ளிக்கூடங்களைப் பற்றி விரித்துக் கூற வேண்டுவதில்லை. பரதேசிய மன-மொழி-செயல்கள் வாழ்வில் அரும்புதற்குத் தற்காலப் பள்ளிகளே விதை விதைக்கின்றன. அங்கிருந்து பட்டம் பெற்று வருவோர் சுதேசியத்தைத் தீட்டாகக் கருதுகிறார். அக்கற்றவரால் தேசம் நடத்தப்படுகிறது.

பள்ளிப்பிள்ளைகளின் உடை, புத்தகம், விளையாட்டுப் பொருள்கள் முதலியன பரதேசிய மயமாயிருத்தல் கண்கூடு. பிள்ளைகள் மனத்தில் சுதேசியம் புகுதல் வேண்டும்.

தற்கால நீதி மன்றங்கள் கிராமங்களின் இரத்தத்தை உறிஞ்சும் பூதங்களாக நின்றுகொண்டிருக்கின்றன. வக்கீல் கூட்டம் பெருகப் பெருகக் கிராமங்கள் பாழ்பட்டுக்கொண்டே போகும். இவ்வக்கீல்கள் நாட்டுத் தொழில்களை வளர்க்க முன்வருவார்களா? அவர்கள் அறிவு அத்துறையில் சென்றால் நாடு செழிப்புறுமே. நம் நாட்டுப் பொருள்களைப் பல வழியிலும் அயல்நாட்டுக்கு வாரி வாரிக் கொடுப்போர் வக்கீல்கள் என்பதை விளக்கவேண்டுவதில்லை.

ஸ்தல ஸ்தாபனங்கள் பெருகப் பெருகச் சுதேசியம் பாழ்படுதல் ஒருதலை. சிமிட்டி, தார், குழாய், மின்சார விளக்குச் சாமான்கள் முதலியன எங்கிருந்து வருகின்றன? இவைகளுக்கு எவ்வளவு பணம் பிறநாடுகளுக்குச் செல்கிறது? இந்தியாவின் செல்வத்தைப் பட்டப் பகலில் வாரிக் கொடுக்கும் ஸ்தலஸ்தாபனங்களின் பெருக்கினால் நலமுறுவோர் யாவர்? சிந்தியுங்கள்.

சுதேசியத்தைப் பாழ்படுத்தும் அமைப்புகளைப் பெருக்குவதால் நாட்டுக்கு என்ன இலாபம்?

### முன் அநுபவம்

பரதேசியத்துக்கு ஆக்கந் தேடும் அமைப்புகளை ஒழிப்பதெப்படி? சத்தியாக்கிரகப் போரால் மட்டும் அவைகளைத் தொலைத்தல் இயலுமா? முன் அநுபவம் நம் முன்னே நிற்கிறது. சத்தியாக்கிரகப் போர் மும்முரமாக நடந்தால் பெருநலன் விளையும்.

இரண்டுமுறை நடந்த போர் நிகழ்ச்சிகள் நம்முன்னே நிற்கின்றன. தடிகொண்டு தொண்டர்களைப் புடைத்தவர் யார்? தொண்டர்களைச் சிறைக்கனுப்பும் மாஜிஸ்டிரேட்டுகள் யார்? தொண்டர்களை அடிக்கவும், தண்டிக்கவும் இந்திய மக்கள் கிடைக்கும் வரை லார்ட் ஜெட்லந்து வீறுகொண்டு பேசாது வேறென் செய்வார்?

மீண்டும் போர் தொடுக்கப்பட்டால் பழையபடியே நடைபெறும் என்றே ஊகிக்கலாம். இவ்வுண்மை காந்தியடிகட்குப் புலனாகியிருக்கிறது. அதனால் அவர் காங்கரஸில் நான்கணா அங்கத்தவராகவு மில்லாமல் காங்கரஸுக்கு மட்டும் துணைசெய்து வருகிறார். ஆதலால் சத்தியாக்கிரகப் போரை உயிர்ப்பித்து நடத்தப் புகுவது காலத்துக்கேற்ற சேவையாகாதென்றே கூறலாம்.

### பதவி

பின்னை என் செய்வது? சட்டசபையைப்பற்றிப் பதவியேற்றுச் சுயராஜ்யத்துக்கு இன்றியமையாத சுதேசியத்தை ஒல்லும் வகையாதல் வளர்க்கப் புகுவது காலத்துக்குரிய சேவையாகும். காங்கரஸ் சார்பில் மந்திரி பதவியில் அமர்வோர் நம்பிக்கையுடையவராயிருப்பர். அவர் சுதேசியத்துக்கு இடர் விளைத்து வரும் அமைப்புகளை அழித்து அல்லது சீர்திருத்தி நலஞ் செய்யலாமன்றோ? ஒரோ வழியிலாதல் சுதேசியத்துக்கு ஆக்கந் தேடலாமன்றோ? பதவியேலாது சுதேசியத்தை வளர்ப்பதைப் பார்க்கினும் பதவியேற்றுச் சுதேசியத்தை நன்கு வளர்க்கலாம்.

தேசம் நம்முடையது. வாக்காளர் நம்மவர். சட்டசபை நம்முடையது. மந்திரிமார் நம்மவர்; காங்கரஸ் சார்பினர். நம்முடைய சட்டசபையை - நம்முடைய மந்திரி பதவியை - ஏன் அதிகார வர்க்கத்துக்குப் பயன்படுத்தல் வேண்டும்? வரிப் பணத்தைக் கூடியவரை நல்வழியில் பயன்படுத்தலாம்.

### காந்தியடிகளும் பதவியும்

பதவி ஏற்பதில் காந்தியடிகளுக்குக் கருத்து வேற்றுமையில்லை. அதுபற்றியே அவர் உறுதிமொழி கேட்டார்; நியாய விசாரணை கேட்கிறார். அரசாங்கம் காந்தியடிகளுடன் கலந்து கடனாற்ற ஒருப்படவில்லை. அதன் நிலையை உலகம் உணர்ந்து கொண்டது. இனிப் பதவியேற்றுக் காரியம் நடத்துவதே ஒழுங்கு. சட்டத்துக்குள் நின்றே ஐந்தாண்டு திட்டமொன்று வகுத்துச் சுதேசத்தொழில் பலவற்றை உயிர்ப்பிக்கலாம். சிலவாண்டு செய்யக்கூடியனவற்றைச்செய்து பார்த்து, கவர்னர்கள் முட்டுக்கட்டை போடுகிறார்களா இல்லையா என்பதை அநுபவத்தில் தெளிந்து, பின்னே நிலைமை நோக்கி நடந்துகொள்ளலாம்.

### யுத்தம்

உலக யுத்தம் வருமென்று சிலர் கனவு கண்டுகொண்டிருக்கிறார். யுத்தம் வந்தால் இந்தியா கேட்பதை இங்கிலாந்து கொடுக்க முன்வரும் என்று அவர் கருதுகிறார். உலக யுத்தம் தோன்றுமா? தோன்றுங்குறி முன்னே இருந்தது. அக்குறி இப்பொழுது மறைந்து விட்டதென்றே கூறலாம்.

உலக யுத்தம் தோன்றாதவாறு இங்கிலாந்துமுயன்றே வருகிறது. இங்கிலாந்து யுத்தத்தை விரும்பவில்லை. இங்கிலாந்துக்குப் புதுத் தேசங்கள் எற்றுக்கு? உள்ள தேசங்கள்போதாவோ? உள்ளனவற்றைக் காத்துக்கொண்டால் போதும் என்று இங்கிலாந்து கருதுகிறது. ஒரு வேளை யுத்தம் நிகழினும் அதற்கும் இங்கிலாந்து சித்தமாகவே யிருக்கிறது.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் நடுமணி போன்றது இந்தியா. இந்தியா, தற்போது இங்கிலாந்தின் செவிலித்தாயாக இருந்து வருகிறது. செவிலித்தாயின் காப்புக்கென ஹாங்காங், சிங்கப்பூர், திரிகோணமலை, ஏதேன் முதலிய இடங்கள் அரண்களாக நின்று கொண்டிருக்கின்றன. ஏதேனையும் பர்மாவையும் இந்தியாவினின்றும் பிரித்ததன் உள்ளக்கிடக்கையை ஓர்ந்தால் உண்மை விளங்கும்.

### ஹிட்லர் - லான்ஸ்பரி சந்திப்பு

ஹிட்லரை, லான்ஸ்பரி சந்தித்துப் பேசியதன் நோக்கம் என்னை? அந்தரங்க நுட்பங்கள் பல இருக்கும். ஒருலக மகாநாடு கூட்ட லான்ஸ்பரி விரும்புகிறார். அதில் கலந்துகொள்ள ஹிட்லர் இணங்கியுள்ளார் என்று தெரிகிறது. மகாநாட்டைக் கூட்டுமாறு அமெரிக்கத் தலைவர் ரூஸ்வெல்ட் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார். அம்மகாநாட்டில் உலக யுத்த உணர்வே கல்லப்படும். ஸ்பெயின் போர் ஸ்பானியருக்குள் நடக்குமாறுவிடப்படவேண்டுமென்றும், மற்றவர் அதில் தலையிடலாகாதென்றும் மகாநாட்டில் தீர்மானஞ்செய்யப்படுமென்று லான்ஸ்பரி சொல்கிறார். இதனால் உலக யுத்தத்துக்கு இடமில்லை என்பது நன்கு விளங்குகிறது.

ஹிட்லர் சாதாரண மனிதரல்லர். அவர் சிறந்த இராஜதந்திரி. யுத்தத்தில் வீழ்ந்துபட்ட ஜெர்மெனியைப் பழைய நிலைமைக்கு ஹிட்லர் கொண்டு வந்த பின்னரே லாயிட்ஜார்ஜும், லான்ஸ்பரியும், மற்றவரும் அவரைப் பார்க்கப் பறக்கிறார். முன்னைப் போரில் ஜெர்மெனி யிழந்த குடியேற்ற நாடுகளையெல்லாம், சண்டையில் தலைப்படாமலே மருட்டு உருட்டால் ஹிட்லர் பெற்றுக்கொள்ள முயன்று வருகிறார். சமயம் நேர்ந்தால் பிரிட்டிஷார் தம் வயத்துள்ள ஜெர்மென் நாடுகளைத் திரும்பக் கொடுக்க முன்வரினும் வருவர்.

எப்படியாவது உலக யுத்தம் நேராதவாறு தடுத்துவிட இங்கிலாந்து முயன்றே தீரும். ஸ்பெயின் போரில் முஸோலினிக்குத் துணையாக முன் நின்ற ஹிட்லர் இப்பொழுது ஏன் விலகி நிற்கிறார்? ஜெர்மெனிக்கு இதாலியின் நட்பைப் பார்க்கினும் பிரிட்டன் நட்பே சிறந்ததென்பது ஹிட்லருக்குத் தெரியும். முஸோலினியையும் ஹிட்லரையும் பிரிக்கவல்ல சூழ்ச்சிகள் நடவாமலா இருக்கும்? இந்தியத் தலைவர்கள் உலக நிலைமைகளை யெல்லாம் உன்னி இராஜதந்திரமுறையைக் கையாள்வார்களென்று நம்புகிறோம்.

### காந்தி வழியே வழி

இந்தியாவின் நிலைமையையும் இங்கிலாந்தின்நிலைமையையும்சிந்தித்தே காந்தியடிகள் அஹிம்ஸா தர்மப் போர் புரியத் தொடங்கினர். அவர் விரும்பிய முறையில் ஆக்க அழிவு வேலைகள் நடைபெறவில்லை. அவர் என் செய்வார்! வேறு வழியில்லை. அதனால் சட்டசபை நுழைவுக்கு ஆசிகூற அடிகள் முற்பட்டார்; பதவி ஏற்றலுக்கும் துணை நிற்கிறார். நியாய விசாரணைக்கு அரசாங்கம் இணங்கி வாராது. அதைக் கொண்டு பதவி யேற்றலை நெகிழவிடுதலாகாது. பதவி யேற்றுச் சில ஆண்டு செய்வன செய்வது நலம்.

வருந் திங்கட்கிழமை அலகாபாத்தில் காங்கரஸ் காரியக்கூட்டம் நடைபெறப்போகிறது. அதில் பதவியைப்பற்றி ஒருவித நன்முடிவுக்கு வருதல்வேண்டும்.

அமெரிக்கப் பத்திரிகை நிருபரிடம் காந்தியடிகள் வெளியிட்ட கருத்துக்கள் பொன்னேபோல் போற்றத்தக்கன. அவைகளுள் இரண்டொன்று வருமாறு:—

"நான் காங்கரஸில் சாதாரண அங்கத்தவனாகவுமில்லை. * * * * தற்போது எழுந்துள்ள கிளர்ச்சி அரசியலின் பாற்பட்டதன்று. அஃது ஒழுக்கத்தின் பாற்பட்டது. போராட்டம்சத்தியத்துக்கும்-அசத்தியத்துக்கும், அஹிம்ஸைக்கும் - ஹிம்ஸைக்கும், நேர்மைக்கும் - திமிருக்கும் நடந்துவருகிறது. 'கத்தி முனை' உணர்வு கொண்டன்றி லார்ட் ஜெட்லந்து அவ்வாறு பேசியிரார். **யான் நியாய விசாரணை கேட்கிறேன்."

இவ்வறவுரைக்கு இணங்காதவர் வேறெதற்கு இணங்குவரப் போகிறார். பிடிவாதத்தைப் பதவி யேற்றே குலைத்தல் வேண்டும்.

# சிறைக்குப்பின் சர்வாதிகாரம்

## மாதர் மறுமணத்தை வெறுத்தமை

## முஸ்தபா கமாலின் இளமை வாழ்க்கை

### பெற்றோர் கொண்ட பேத எண்ணங்கள்

(திரு. ஸ்டிபான் லோரான்ட்)

"என்னுடைய இளமைப் பருவத்தில் நடந்த ஒரு விஷயத்தை என்னால் மறக்கக்கூடவில்லை. அது என் மனத்தில் வேர்கொண்டு விட்டது" என்று தற்போதைய துருக்கியின் மன்னவாக விளங்கும் முஸ்தபா கமால் கூறுகிறார். அவர் பின்னும் கூறுவதாவது:—

### தாயார் - தகப்பனார்

"அது நான் பள்ளிக்கூடம் செல்லும் காலத்தில் நிகழ்ந்தது. என்னுடைய தாயார் பழைய பழக்க வழக்கங்களில் முழுநம்பிக்கை கொண்டவர். அவர் அப்பழக்க வழக்கங்களிலேயே பிறந்து வளர்ந்து, வாழ்ந்தவர். அவற்றை அவரிடமிருந்து பிரித்தல் முடியாது.

"என்னுடைய அப்பாவோ பரந்த நோக்குடையவர்; அதனாலேயே என்னை அறிவியல் நூல்களைக்கற்பிக்கும் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்ப விரும்பினர். மதவிஷயங்களில் அவருக்கு அவ்வளவு நம்பிக்கையில்லை. என்னை ஒரு மதப்பள்ளிக்கூடத்திலும் சேர்க்கவில்லை. என்னைச் சேர்த்த பள்ளிக்கூடத்தில் கொரானைப் பாடமாகவே வைத்ததில்லை.

### தகப்பனார் வெற்றி

"இப்படிப்பட்ட பெற்றோர்தம் அபிப்பிராயத்தில் தகப்பனாரே வெற்றி பெற்றார். ஆனால் என்னைப்பள்ளிக்கூடத்தில் சேர்க்கும் போதுமட்டும் மதச்சடங்குகள் நடைபெற்றன. நான் பாத்மா மொல்லா கதின் பள்ளிக்கூடத்தில் படித்தேன்.

பள்ளிக்கூடம்போன முதல் நாளன்று எனது தாயார் என்னை அலங்கரித்தார். வெள்ளை உடையோடு தங்கப்பூக்கள்போட்ட குட்டையொன்று என் தலையில் சுற்றப்பட்டது. உபாத்தியாயர் மற்றவர்களோடு என்னைப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துச் சென்றார்.

### பள்ளிக்கூடம் செல்லல்

"வீட்டை விட்டுப் புறப்படுமுன் முதலில் தாயாரையும், பின்னர் தகப்பனாரையும், இறுதியில் உபாத்தியாயரையும் வணங்கினேன். இளைய பிள்ளைகளோடு விளையாட எனக்குச் சந்தோஷம் தான். பள்ளிவாயிலுக்குப் பக்கத்திலிருந்த பள்ளிக்கூடத்திற்குச்சென்றதும் எல்லாப்பிள்ளைகளும் சேர்ந்து பாடினார்கள். உபாத்தியாயர் மட்டும் என்னைத் தனி அறைக்கு அழைத்துச் சென்று கொரானை உபதேசித்தார்.

"ஆறுமாதங்களுக்குப் பின்னர் என்னைப் பள்ளிக்கூடத்தை விட்டு நிறுத்தி ஷேம்ஸி எப்பண்டி என்ற பெரியார் ஐரோப்பிய முறையில் நடத்தும் ஒரு பள்ளிக்கூடத்துக்கு என் தகப்பனார் என்னை அழைத்துச் சென்றார். தாயார் தடை செய்யவில்லை. காரணம் என்ன? அவர்தம் கோரிக்கை நிறைவேறி விட்டது."

### தகப்பனார் நிலைமை

இவ்வாறு தாயாரும் தகப்பனாரும் கொண்டிருந்த மாறுபட்ட அபிப்பிராயமே பின்னாளில் முஸ்தபா கமாலை ஒரு புரட்சிக்கு அதிபராக்கிவிட்டது. இந்த வித்தியாசம் துருக்கியின் பழைய வழக்கங்களுக்கும் புதிய நாகரிகத்துக்கும் நடந்த போரேயென்னலாம். முஸ்தபா இடைப்பட்ட கொள்கையில் பிறந்தவர்.

தகப்பனார் பெயர் அலிரிஸா பே. அவர் பழைமையின் தப்புகளை உணர்ந்தார். துருக்கி அரசாங்கத்தில் சில மாறுதல்களை விரும்பினர்.

தாயாரோ மிகுந்த தெய்வபக்தியுடையவர். பழைய கொள்கையே அவருக்குப்பிடிப்பது. தற்கால உலகத்தை அவர் வெறுப்பார். இவ்வளவு இருந்தும் எழுதவும் தெரியாது; படிக்கவும் தெரியாது. துருக்கிதேசத்து அக்காலத்து வழக்கப்படி வீட்டிற்குள்ளேயே அவர் வாழ்ந்தார். வீட்டிலுள்ளவரோடு தவிர மற்றவரோடு பேசியதேயில்லை.

தாயாரும் தகப்பனாரும் தங்கள் மத அபிப்பிராயத்தில் ஒருவருக்கொருவர் இரண்டு துருவ தூரத்திலேயேயிருந்தனர் எனக் கூறிவிடலாம்.

### தகப்பனார் தொழில்

தகப்பனாருக்கு சலோனிகா துறைமுகத்தில் வேலை. சம்பளமும் அதிகமாக இல்லை. அக்குறைந்த சம்பளத்தை மாதமாதம் பெறுவதில்லை. சிலமாதங்கள்வரை பாக்கியிலும் இருக்கும். சலோனிக்கா நகரில் அவர்தம் குடும்பம் பெரிய கஷ்டங்களுக்குள்ளாயிற்று. முஸ்தபாவோடு பிறந்தவர் இருவர். ஒருவர் ஆண்; மற்றொருவர் பெண். சகோதரர் இளவயதிலேயே இறந்துவிட்டார். தங்கையின்பெயர் மக்போலா.

அலிரிஸாபே துறைமுக வேலையை விட்டார். குறைந்த சம்பளம் அவருக்குப் போதவில்லை. ஒருகட்டை தொட்டியை வைத்துக் கொண்டார். இதில் பெருத்த லாபம் கிடைத்தது.

### தகப்பனார் மரணம்

முஸ்தபா இக்காலத்தில் இளையவராக இருந்தார். நீலக்கண்களும், கறுத்த நீண்ட கூந்தலும் அவரை அழகு படுத்தின. இச்சந்தோஷம் சொற்ப நாட்களுக்குள் மறைந்தது. ஏன்? தகப்பனார் இறந்து விட்டார். குழந்தைகளுக்காகவும், மனைவிக்காகவும் ஒன்றும் சம்பாதித்து வைக்கவில்லை. முஸ்தபாவுக்கு வயது ஒன்பதே.

சலோனிகா நகரத்துக்கு இரண்டு மணி நேர நடை தூரத்துள்ள லஸாஸன் என்ற கிராமத்தில் வசித்து வந்த சகோதரன் வீட்டுக்குத் தாயார் இரண்டு குழந்தைகளோடும் சென்றார். அங்குத் தொழுவங்களைச் சுத்தம் செய்துவிட்டு மாடுகளை மேய்த்துக் கொண்டு வருவதே முஸ்தபாவின் வேலை. அவர் ஒரு சிறந்த விவசாயியாகி விட்டார்.

### மறுபடியும் பள்ளிக்கூடம்

இரண்டு வருஷங்களுக்குப் பிறகு முஸ்தபா தேகக் கட்டுடையவர் ஆனார். தாயார் தம்மகனை மாடுமேய்க்கும் இடையராக்க விரும்பவில்லை அதனால் சலோனிக்கா நகரிலிருந்த தமது தமக்கையாரிடம் சிறிது பணத்தைக் கடனாக வாங்கி அதைக்கொண்டு பிள்ளையைப் படிக்கவைத்தார்.

விவசாயத்தில் இரண்டு வருஷங்கள் பழகிய பின்னர் முஸ்தபா ஒரு மத்தியதரப் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்தார். அங்குச் சும்மாயிருக்க முடியவில்லை. எப்போதும் மற்றப் பிள்ளைகளோடு சண்டைபோடுவதே வேலை. அதனால் ஒருநாள் கைமக் ஹபிஸ் என்ற அராபிய உபாத்தியாயர் கமாலை வெளியில் தள்ளி விட்டார். இதுவே உயர்ந்த தண்டனை.

கமாலுக்குக்கோபம் வந்து விட்டது. அதைத்தணிக்க முடியவில்லை. பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டு லஸாஸான் கிராமத்துக்குச் சென்றார்; பழையபடி விவசாயத்தில் இறங்கி விட்டார். ஆனால் இதில் பலநாள் தங்கியிருக்க முடியவில்லை.

### இராணுவப் பயிற்சி

முஸ்தபாவின் சிநேகன் ஒருவன் இராணுவப் பள்ளிக்கூடம் ஒன்றில் சேர்ந்து விட்டான். அவன் பெயர் அஹமத். அவன் மேஜர் காத்திரிபேயின் குமாரன். அவன் இராணுவச்சட்டப்படி அணிந்து கொண்டிருந்த உடைமீது பொறாமைகொண்டு முஸ்தபாவும் இராணுவப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து விட்டார்.

தாயார் இதைத்தடுத்தார். முஸ்தபா தாய்ப்பேச்சைக் கேளாமல் தகப்பனாருடைய நண்பர் ஒருவருடைய உதவி பெற்று அவர்தம் முயற்சியால்இராணுவப்பள்ளிகூடத்தில் சேர்ந்து விட்டார்.

மகன் இராணுவ உடை அணிந்திருப்பதைத் தாயார் விரும்பவில்லை. எனினும் முஸ்தபா கெட்டிக்காரனாகிப் பள்ளிக்கூடத்தில்சிறந்தபையனாகிவிட்டார்.

### கணக்கில் பிரியம்

முஸ்தபாவுக்குக் கணக்கில் பிரியம் அதிகம். கணக்கு உபாத்தியாயரான காப்டன் முஸ்தபா என்பவர் பையனிடத்தில் மிகுந்த அன்புள்ளவர். இரண்டாவது வருஷத்தில் கீழ்வகுப்புக்குக் கணக்குப்பேசிக்கும்படி அவர் முஸ்தபாவை அனுப்பினர். முஸ்தபா இதிலும் திறமைசாலியாக விளங்கினர். அதனால் அவர் அவனுக்குக் 'கமால்' என்ற பட்டத்தைத்தந்தார். 'கமால்' என்ற பதத்துக்கு அராபி மொழியில் முற்றும் தேர்ந்தவன் என்பது பொருள். அதன் பின்னரே முஸ்தபாவுக்கு முஸ்தபா கமால் என்ற பெயர் வழங்கலாயிற்று. இப்பள்ளிக்கூடம் முடிந்தபின் முஸ்தபா மொனஸ்திர் நகரிலுள்ள இராணுவச் சாலைக்குச் சென்றார். அங்கும் புகழே கிடைத்தது. இவருடன் படித்த ஒருவர் கீழ்க்கண்டவாறு இவரைப்பற்றிக் கூறுகிறார்: அப்போது முஸ்தபாவுக்கு வயது பதினேழு. அவர் கூறுவது வருமாறு:—

"முஸ்தபா எப்போதும் தனியாக இருப்பதற்கே பிரியமுடையவர்; எப்போதும் புத்தகமும் கையுமாக இருப்பார். அவருக்கு நண்பர் பலர். அவருக்கு விரோதி ஒருவரும் இரார். அவர் அநேக புத்தகங்களைப் படித்தார். படித்தகாலத்திலும் மும்மடங்கை அப்புத்தகங்களைப் பற்றிச் சிந்திக்கச் செலவழிப்பார்."

சிலபிள்ளைகள் மட்டும் அவரை விரும்புவது இல்லை. ஒருநாள் அவர்கள் முஸ்தபாவை நோக்கி 'நீ இனி என்ன செய்யப்போகிறாய்?' என்று கேட்டார்கள். 'ஏதாவது செய்வேன்' என்று கூறிவிட்டுக் கடுகடுத்த முகத்தோடு முஸ்தபா போய் விட்டார்.

### தாயாரின் இரண்டாவது மணம்

விடுமுறை நாட்களில் தாயாரிடம் சென்றார். அவர் ஒரு செல்வனை இரண்டாவது மணம் செய்து கொண்டிருக்கக் கண்டார்; அம்மணத்தை வெறுத்தார். மாற்றாந் தகப்பனோடு பேசவேயில்லை. பிற்பட்டவாழ்க்கையிலும் அவர் தம் பெயரை உச்சரிக்கவும் அவர் விரும்பவில்லை.

திரும்பியும் மொனஸ்டிர் நகரத்துக்கு வந்ததும் அவருக்கு ஒரு பெரிய உத்தியோகம் கிடைத்தது. சில நாட்களுக்குப் பின் கான்ஸ்தாந்தி நோபிளுக்கு மாற்றப்பட்டார். இது ஓர் அதிசயத்தைத் தரக்கூடிய முன்னேற்றமே.

### சிறைவாசம்

இங்கு இருக்கும்போது முஸ்தபா தம் நாட்டின்மீது நாட்டம் செலுத்த ஆரம்பித்தார். 'வாடான்' என்ற புரட்சி இயக்கத்துக்கும் அவர் தலைவரானர். இதன் பயனாக அவர் ஸ்தாம் புல்கரச்சிறையில் அடைக்கப்பட்டார்.

சாதாரணமாக ஒரு சர்வாதிகாரியின் அரசியல் முன்னேற்றம் சிறைவாசத்துக்குப் பின்னரே உண்டாகிறது. முஸோலினியும், ஹிட்லரும் சிறைவாசம் பெற்ற பின்னரே சர்வாதிகாரியானார். ஸ்டாலினிலும் அப்படியே. முஸ்தபாகமால் மட்டும் இச்சட்டத்துக்கு விரோதமாகலாமா?

—"டிட் பிட்ஸ்"

# ஸ்பெயினில் இந்தியர்

## போலீஸ்காரர் கொல்லப்பட்டார்

## இதாலியர் பட்டினி

### பிராங்கோவின் பரிதாப நிலை

### ஸ்பெயினைப் பற்றிய சமாதானப் பேச்சு

### ஜெர்மெனி உலக மகாநாட்டை விரும்புகிறது

**உலக யுத்தம் சந்தேகம்**

உலகம் போகிற போக்கில் யுத்தம் ஏற்படாது என்று சந்தேகிக்க இடம் இருக்கிறது. ஜெர்மெனி ஒரு பெரிய உலக மகாநாடு கூட்டச் சம்மதிக்கிறது. அப்படிப்பட்டமகாநாடு ஐரோப்பியநாடுகளால் கூட்டப்படக் கூடாதாம். அமெரிக்கத் தலைவரான ரூஸ்வெல்ட்டே இவ்விஷயத்தில் தலையிட்டு மகாநாட்டைக் கூட்ட வேண்டுமாம். இக்கூட்டத்துக்குப் பொது உடைமை நாடாகிய ருஷ்யாவருவதுபற்றிஜெர்மெனிஎவ்வித ஆட்சேபத்தையும் கிளப்பாதென்று தெரிகிறது. இம்மகாநாட்டின் அந்தரங்க யோசனை தெரியவில்லை. பிரான்ஸ், பிரிட்டன் முதலிய நாடுகளின் அந்நிய நாட்டு மந்திரிகளை ஆலோசித்துவிட்டு வந்து ஹிட்லரிடம் லான்ஸ்பரி சில யோசனைகள் கூறியிருப்பதாகத் தெரிகிறது. அந்தயோசனைகளுக்குப் பிறகே ஹிட்லர் இவ்வித முடிவுக்கு வந்திருக்கிறார். இம் மகாநாட்டில் உலகப்பொருளாதாரம், பல்வேறுபட்ட நாடுகளின் ஆயுதப் படைகள், தாதுப்பொருள்கள் முதலியன கவனிக்கப்படல் வேண்டுமாம்.

**ஸ்பெயினில் இந்தியர்**

ஸ்பெயினில் அரசாங்கப்படைகள் நாளுக்குநாள் பெருகிக்கொண்டே வருகின்றன. டபிள்யூ. ஜே. பாரடே என்ற பிரிட்டிஷ் தொண்டர் ஒருவர் ஸ்பெயினை நோக்கப்பார்த்துப் பின்வருமாறு கூறுகிறார். ஸ்பெயினில் அரசாங்கத்தரப்பில் பல நாட்டுத் தொழிலாளர்கள் சேர்ந்து விட்டார்களாம். அவர்களுடைய எண்ணிக்கையும் தரப்பட்டிருக்கிறது. அது வருமாறு:— இதாலியர் 100, ஜெர்மானியர் 1500, பிரெஞ்சுக்காரர் 5000, பிரிட்டிஷார் 600, அமெரிக்கர் 700, ருஷ்யர் 2000, ஜப்பானியர் 300, சீனத்தவர் 1500, அராபியர் 200, இந்தியர் 100. நூற்று ஐம்பது பெண்களுக்குமேல் யுத்தத்தில் கலந்து கொண்டிருக்கிறார்கள். யுத்தத்தால் அநாதையான 500 சிறுவர் மெக்ஸிகோவுக்கு அனுப்பப்பட்டனர். ஜெனரல் பிராங்கோ இப்போதே தம் நிலைமையை உணர்ந்துகொண்டார். இதுவரையில் அவர்பேசி வந்த பேச்சுக்களெல்லாம் காற்றில் விடப்பட்டன. அவர் குடியாட்சியை அமைக்க எண்ணியதாக இப்போது கூறுகிறார்.

**கலகக்காரர் திண்டாட்டம்**

ஸ்பெயினில் ஜெனரல் பிராங்கோவுக்கும் அந்நியநாட்டு வீரர்களுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டிருக்கிறது. யுத்த விஷயங்களை வேறொருவரிடம் ஒப்படைத்துவிட்டு ஜெனரல் பிராங்கோ அரசியல் விஷயங்களைக் கவனிக்க வேண்டுமென்று ஹிட்லரும், முஸோலினியும் கூறுகின்றனர். இதனால் பிராங்கோவின் பலம் குறையும். வெளிநாட்டாரின் பலமே அதிகமாகும். அதனால் ஸ்பெயினில் சில பாகங்கள் அந்நியர் வசமாகும். இது 'தேனை யெடுத்தவன் புறங்கையை நக்காது விடுவானா' என்ற பழமொழிக்கு உதாரணமாகிறது. நன்மையை எதிர்பாராது இதாலியும் ஜெர்மெனியும் ஸ்பெயினில் யுத்தம் செய்யவில்லை. இவ்வித அந்நியரின் போக்கை ஜெனரல்பிராங்கோ விரும்பவில்லை. பிறகு என்னநேருமோ தெரியவில்லை.

ஸ்பெயின் யுத்தத்தில் ஒருபெரிய கடல்யுத்தம் நடைபெறுமென எதிர்பார்க்கப்பட்டது. அதுவும் பிஸ்கேவளைகுடாவிலேயே நடைபெறுமாம். இவ்வளைகுடாவில் கலகக்காரர் பெருமுயற்சியில் யுத்தம் செய்தனர். அவர்களுக்குண்டான நஷ்டத்துக்கோ அளவில்லை. நூற்றைம்பது பேர் இறந்தனர். அறுநூறு பேர் காயமடைந்தனர். புரபஸர் அலாங் என்ற ஸ்பானிய கவிஞர் கலகக்காரரால் சுடப்பட்டார். பிரிட்டிஷ் பத்திரிகை நிருபர் சிலரை ஸ்பெயினில் பிரவேசிக்கக்கூடாதெனக் கலகக்காரர் கூறிவிட்டனர்.

தற்போது ஸ்பெயினில் ஜெனரல் பிராங்கோவின்நிலை பரிதாபகரமாகவே யிருக்கிறது. பிரிட்டிஷ் மதத்தலைவர் சிலர் ஸ்பெயினுக்குப்போய் சுற்றிவிட்டு வந்தனர். வந்தவர் ஸ்பெயின் கலகத்தைப்பற்றி ஓர் அறிக்கை விட்டிருக்கின்றனர். அந்நியருடைய உதவியில்லாமல் கலகக்காரரால் போரிடமுடியாதென்று அவர்கள் கூறுகிறார்கள். தற்போது ஸ்பெயினில் நடக்கும் சம்பவங்களும் இவ்வபிப்ராயப்படியே யிருக்கிறது. சான்சபேஸ்தியன் முனையில் 1500 கலகக்காரர் இறந்து விட்டனராம். பில்போ பிரதேசத்தில் அரசாங்கப்படைகள் முன்னேறி வருகின்றனவாம். முன்னைவிட இப்போது அதிகமாக வெளிநாட்டுப்பொருள்களும் வீரர்களும் ஸ்பெயினுக்குள் செல்லுதல்கூடாதென மற்ற நாடுகளால் தடுக்கப்பட்டு வருகின்றன. அதனால் இனி அரசாங்கப்படைகளுக்கே பெரும் வெற்றிகள் உண்டாகுமென்று கருதப்படுகிறது.

பின்வந்த செய்திகளில் அரசாங்கத்துக்குப் பலத்த வெற்றிகள் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. வாலன்ஸியா நகரத்துக்கு அருகிலிருந்து கலகக்காரர் துரத்தி விடப்பட்டனர். ஆகாய விமானங்களிலிருந்து கலகக்காரர் மீது விஷவெடிகள் வீசப்படுகின்றன. விஸில்டோ, லிடான், ஆர்டெண்டி முதலிய பல நகரங்கள் அரசாங்க வசமாயினவாம்.

**ஸ்பெயின் சமாதானம்**

இதற்கிடையில் திரு. சர்ச்சில் ஸ்பெயினைப்பற்றி ஒரு சமாதானப் பேச்சைக் கூறினர். உலகத்தில் பெரிய நாடுகளாகிய ஐந்து நாடுகளும் ஸ்பெயினில் சமாதானம் ஏற்படவேண்டுமென்று விரும்புவதாகவும் அதற்கு ஆறு வருஷ கால தவணை தருவதாகவும் கூறினர். இவ்வாறு வருஷங்களில் முதல் இரண்டு வருஷங்களுக்குள் அமைதி ஏற்படவேண்டுமென்றும், பின் இரு வருஷங்களில் மக்களுக்குள் சமாதானமும் அந்நியோன்னியமும் உண்டாகவேண்டு மென்றும் கடைசி இரண்டு வருஷங்களில் பார்லிமெண்டரி அரசாங்க முறை ஏற்படுதல் அவசியமென்றும் அவர் கூறினர். இது எப்படி முடியுமென்று தெரியவில்லை. இவ்வித சமதானம் உண்டாக இரு தரப்பாருடைய ஒத்தாசையும் அவசியம் வேண்டுமாம்.

**உலகத்தைப் பாதியாது**

ஸ்பெயினைப் பற்றி எவ்விதமுடிவும் கூறமுடியவில்லை. 1931-ம் வருஷத்தில் குடியாட்சியை வீழ்த்தக் குடியாட்சியின் விரோதிகளும், 'பாஸிஸ' வெறி பிடித்து அலைவாரும் முயன்றுவந்தனர். சென்ற ஜூலைமாதம் 17-ம் தேதி அவர்கள் கலகம் செய்யஆரம்பித்தார்கள். அக்கலகம் இப்போது பெரிய யுத்தமாகப் பரிணமித்துவிட்டது. இந்நிலையில் எது பலமுள்ளகட்சி என்று கூறுவதற்கில்லை. வரவரக் கலகக்காரருக்கு வெளிநாட்டாரின் உதவிகுறைந்து வருகிறது. அதனால் அவர்களுக்கு தோல்விமேல் தோல்வி ஏற்பட்டுவருகிறது. இவ்விதத்தோல்விக்கு ஒருவாறு ருஷ்யாவும் காரணம் என்று கூறலாம். ஸ்பெயினைக் கலக காலத்தில் ஊன்றிக் கவனித்து வருவார்க்கு அத்தேசத்தின் முடிவு உலகத்தை எவ்விதத்திலும் பாதியாதென்பது விளங்கும்.

**பிரான்ஸும் பிரிட்டனும்**

இச்சமயத்தில் பிரான்ஸ் தேசத்தின் அந்நியநாட்டு மந்திரியான திரு. எம். யூவான் டெல்போஸ் பிரான்ஸ் விரும்புவது சமாதானமே என்று கூறுகிறார். துப்பாக்கி வெடிகளையும் விஷப்புகைகளையும் பிரான்ஸ் விரும்பவில்லையாம். யாரே சண்டையை வலியவரவழைத்துக் கொள்வர். தானாக யுத்தம் வந்து விட்டால் முடியாதென்று சொன்னால் முடியுமா?

இதுவரையில் ஜெர்மெனியும் இதாலியும் ஸ்பெயினுக்கு உதவி செய்து வந்ததைப்பலரும் அறிவர். இப்போது ஜெர்மெனி பின் வாங்குகிறது. 'யார் வெற்றிபெற்றால் நமக்கென்ன?' என்ற முறையில் ஜெர்மெனி நின்று விட்டது. காடலஜாரா முனையில் இதாலிக்கு ஏற்பட்டதோல்வியே இதற்குக் காரணமாம். ஆனால் இதாலிமட்டும் கலகக்காரருக்கு உதவிசெய்வதை நிறுத்த விரும்பவில்லையாம். அரசாங்கத் தரப்பில் யுத்தம் செய்யும் ஜெனரல் மியாஜாவை ஜெர்மெனி புகழ்கிறது. இதுவரை அரசாங்கப் படைகளுக்கு ஏற்பட்ட வெற்றிகளுக்கெல்லாம் இவரே காரணர். 'மான்செஸ்டர் கார்டியன்' பத்திரிகையில் பிரிட்டிஷார் பலர் கையெழுத்திட்ட கடிதம் ஒன்று காணப்படுகிறது. அதில் ஸ்பெயினிலுள்ள பொதுமக்கள்பால் அநுதாபம் காட்டப்படும் விஷயங்கள் இருக்கின்றன. தற்போது ஸ்பெயினைப்பற்றி அதிகமாகப் பிரிட்டிஷார் அறிய விரும்புகின்றனர்.

**உணவுப் பஞ்சம்**

ஸ்பெயினில் கலகக்காரர் உணவுக்கு மிகவும் கஷ்டப்படுகிறார்; அதிக விலை கொடுத்துப் பிரிட்டிஷ் உணவுப்பொருள்களை வாங்க முன்வருகிறார். ஆனால் உதவுவார் இலர்.

அடுத்த மாதத்தில் ஓய்வு பெறப் போகும் பிரிட்டிஷ் பிரதம மந்திரி திரு. பால்டுவின் ரேடியோவில் பேசினர். உலக க்ஷேமத்துக்குக் குடியாட்சி மிக அவசியமென்பதை அவர் வலியுறுத்திப் பேசினர்.

**இதாலியர் பட்டினி**

அடிஸ் அபாபா அபிஸினியாவின் தலைநகரம் என்பதை எவரும் மறந்திருக்க மாட்டார். அங்கு முப்பதாயிரம் இதாலியர் உணவில்லாமல் கஷ்டப்படுகிறார். இதுவரையில் அடிஸ் அபாபாவுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் பக்கத்து ஜில்லாக்களிலிருந்து தருவித்துக் கொள்ளப்பட்டன. இப்போது அங்குள்ள எதியோப்பிய விவசாயிகள்தங்கள் விளைபொருள்களை அடிஸ் அபாபாவுக்குக் கொண்டு வருவதில்லையாம். அதனால் அங்கு உணவுப்பஞ்சம் ஏற்பட்டு விட்டது. இதாலியர் ஜிபௌத்தி, இரீடிரியா முதலிய இடங்களிலிருந்து உணவுப்பொருள்களை வரவழைத்துப்பார்த்தனர். இவை பாதைகள் மூலமாகவே கொண்டு வரப்பட்டன. இப்பாதைகள் மழையால் நாசமாக்கப்பட்டன. அதனால் இவ்விடங்களிலிருந்து உணவுப்பொருள்களைக் கொண்டுவர முடியவில்லை. எதியோப்பியரிடமிருந்து இதாலியர் திருடியும் பார்த்தனர். இப்போது அதுவும் முடியவில்லையாம். அவர்கள்பாடு திண்டாட்டமாகவே யிருக்கிறது.

**அயர்லாந்து சந்தோஷம்**

அயர்லாந்தில் உணவுப் பொருள்கள் மீது போடப்பட்டிருந்த வரிகள் பல குறைக்கப்பட்டன. இதனால் மக்கள் சந்தோஷப்படுகிறார்கள்.

**வியாபாரக் கப்பல்கள்**

சென்ற வாரம் குறிப்பிடப்பட்ட பிரிட்டிஷ் வியாபாரக் கப்பல்களைப்பற்றி பார்லிமெண்டில் விவாதங்கள் நடைபெற்றன. ஸ்பானிய அரசாங்கம் பில்போ பிரதேசத்துக்கருகில் வியாபாரக்கப்பல்களுக்குப் பாதுகாப்பு அளிக்க மறுத்து விட்டதாம். அதனால் அவ்வியாபாரக் கப்பல்களில் ஏற்றிச் சென்ற சாமான்கள் அரசாங்கப் படைகளுக்குத் தரப்படவில்லையென்று அந்நியநாட்டு மந்திரி கூறினர்.

**ஜெர்மெனியும் கத்தோலிக்கரும்**

ஜெர்மெனியில் தற்போது ரோமன் கத்தோலிக்கர் இம்ஸிக்கப்பட்டு வருவது எல்லார்க்கும் தெரிந்ததே. இது பற்றி ரோமாபுரியில் வசித்துவரும் பெரிய பாதிரியார் ஹெர் ஹிட்லருக்கு ஒரு கடிதம் எழுதினர். அதற்கு ஜெர்மன் சர்வாதிகாரி வேறொரு பதிலை எழுதியிருக்கிறார். அப்பதிலில் ஜெர்மெனி செய்வதே சரியென்றும், பாதிரியார் 'நாஸி' விஷயங்களில் நுழைவது தகாதென்றும் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விதப் பதில் கிடைத்த போதிலும் 'நாஸி' முறையைக் கத்தோலிக்கர் தூஷித்துக்கொண்டே யிருக்கின்றனர்.

**லோகார்னோ**

லொகார்னோ உடன்படிக்கையை முறியடித்துவிட்டு ஹிட்லரும் முஸோலினியும் சென்றுவிட்டனர். அது பற்றிக் கூட்டிய கூட்டத்துக்கு வர அவர்கள் மறுத்துவிட்டார்கள். அப்படியிருந்தும் பிரிட்டிஷ் அந்நியநாட்டு மந்திரி திரு. ஈடன் இன்னும் அவ்வுடன்படிக்கையை இழுத்துக்கொண்டிருக்கிறார். சமீபத்தில் பேசிய ஒரு பேச்சில் இதாலி, ஜெர்மெனி முதலிய இரண்டு நாடுகளும் அவ்வுடன்படிக்கைக்குக் கட்டுப்பட்டவை யென்று அவர் கூறினர்.

**போலீஸ் உத்தியோகஸ்தர் கொலை**

பாலஸ்தீனத்தில் கலகம் இன்னும் அடங்கினபாடில்லை. நாளுக்குநாள் வலுத்துக்கொண்டே யிருக்கிறது. இக்கலகத்தில் அராபியரைத் துன்புறுத்தியவர் பலீம்பாஸ்டா என்ற போலீஸ் உத்தியோகஸ்தர் என்று அராபியர் எண்ணியிருந்தார்; அவரை எப்படியாவது கொன்றுவிட வேண்டுமென்று அவர் உயிருக்கு நாள் பார்த்திருந்தனர். அஃது இந்த வாரம் முடிந்து விட்டது. அவர் இவ்வாரம் கொல்லப்பட்டார்.

**'நாஸி'த் தலைவர் சிறைவாசம்**

மத்திய ஐரோப்பாவிலுள்ள ஹங்கேரி 'நாஸி ஸ'த்துக்கு விரோதமாக இருக்கிறது. அங்கு உள்நாட்டு மந்திரியாகப் புதிதாக நியமிக்கப்பட்ட திரு. ஸ்னெல் என்பவர் 'நாஸி' இயக்கத் தலைவரான மேஜர் ஸாலஷு என்பவரையும் அவரைச் சேர்ந்த இருபத்துநான்கு பேரையும் சிறைசெய்து விட்டார். இதனால் அங்கு 'நாஸிஸ'த்துக்கே பெரும் ஆபத்து ஏற்பட்டுவிட்டது.

---

## ஆஹா! மூளையே!

### உரோம ஆராய்ச்சி

க்ஷவரம் செய்துகொள்ள உபயோகிக்கும் 'பிளேட்' என்ற தகடுகளை உற்பத்திசெய்யும் கம்பெனியொன்று இங்கிலாந்திலிருக்கிறது. ஈ. எச். கூபர் என்பவர் அந்தக்கம்பெனியின் மானேஜர். ஆஹா! அவரது மூளையின் ஆராய்ச்சி வேகத்தை என்னென்று எழுதுவது! தினமும் ஒவ்வொரு புருஷனும் தன் முகத்தில் 48 சதுர அங்குலம் க்ஷவரம் செய்து கொள்கிறானம். அந்தப்பிரதேசத்தில் இருபத்தையாயிரம் ரோமங்கள் முளைக்கின்றனவாம். அந்த ஒரு நாளைய உரோமங்களையெல்லாம் சேர்த்து ஒன்றன் நுனியில் ஒன்றாக ஒட்டவைத்துக்கொண்டேபோனால் 20 அடி நீளம் இருக்கும்!



## 'சீனா! சென்றேனும் கல்வி பெறுக'

### நபிகள் நாயகத்தின் வாக்கியம்

**கல்வியின் மேன்மை**

(ஜனுப். கே. எம். ஷேக் பீர்முஹம்மது)

மாநிலமீது மானுடனாய்ப்பிறந்த ஒவ்வொருவரும் பெறவேண்டிய செல்வங்களிரண்டென்ப. ஒன்று கல்வி; மற்றொன்று பொருள். இவ்விரண்டனுள் கல்வியே சாலச் சிறந்ததென்பது ஆன்றோர் முடிபு.

பொருட் செல்வம், ஆறிடும் மேடும் மடுவும்போல் மாறிடும். பொருள், சகடக் கால்போலே வரும்; அநேக ஆபத்துக்களுள் சிக்கி அழியக் கூடியது.

கல்வியோ வெனின் செம்பொற் செல்வமதேபோல் வெள்ளத்தால் கொள்ளப்படாதது; கனலினால் எரிக்கப்படாதது; வேந்தர்கள் பறித்திடக் கூடாதது; சோதரர் விரும்பினும் பங்கிட முடியாதது; கள்ளரால் கைப்பற்ற முடியாதது; கருணையும் ஞானமும் தளிர்க்கச் செய்யும். கல்வி, "அறம் பொருளின்பம் வீடும் பயக்கும், புறங்கடை நல்லிசையும் நாட்டும் உறுங்கவல் ஒன்றுற்றுழி னும்கைகொடுக்கும்."

கல்வியுடையார் எவ்வளவு ஈன ஜாதியினராயினும், அவர் தாழ்ந்தவராகக் கருதப்படுவதில்லை. எங்ஙனம் களர் நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர் விளைநிலத்து நெல்லின் விழுமிதாகக் கொள்கின்றனரோ அங்ஙனமே, கடைநிலத்தவராயினும் கற்றறிந்தோர் தலைநிலத்து வைக்கப்படுவர். படியாத ஒருவர் உயர் குலத்துதித்தவராயினும் 'விலங்கொடு மக்களனையர் ஏனை இலங்குநூல் கல்லாதவர்' என்றபடி மிருகங்களாகவே கருதப்படுவர்; மேலும் 'கண்ணுடைய ரென்பர் கற்றோர் முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்' என்ற குறள் கூற்றுக் கொப்பக் கண்ணற்றவராகவும் கொள்ளப்படுவர்.

மானிடருள் பகுத்தறிவை விருத்தி செய்திருப்போரே மேம்பட்டவர், அறிஞர் எனக்கொள்ளப் படுகின்றனர். பகுத்தறிவை விருத்தி செய்யச்சிறந்த சாதனமாக இலங்குவதும் கல்வியே. இதற்குத் 'தொட்டனைத்தூறும் மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத்தூறு மறிவு' என்ற குறட்பா சான்று பகரும்.

ஆகவே மனிதர்களுக்கு வேண்டிய சகல நன்மைகளையும் நல்குவது கல்வியே எனத்தெற்றெனத் தெரியலாம். இதனாற்றான் 'கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்குமாடல்ல மற்றயவை' என்றார் வள்ளுவர் சிகாமணி. எனவே, இம்மகிதலமீது மானிடர்க்கு உற்ற துணை கல்வியினும் மேம்பட்டதொன்றுமிலை எனச்சந்தேகமின்றிச் சாற்றலாம்.

மண்மீதுள்ள மானிடர்க்குக் கல்வி இன்றியமையாத தொன்றெனக் கண்டுதான் முஹம்மது நபி அவர்கள் 'சீனா தேசம் சென்றேனும் கல்வியைக் கற்றுக் கொள்ளுங்கள்' என்று நவின்றுள்ளார்கள் போலும்!

ஆகவே ஒவ்வொருவரும் கண்டிப்பாய்க்கல்விகற்கவேண்டும். தந்தையர்கள் 'தந்தை மகற்காற்று முதவி அவையத்து முந்தியிருப்பச் செயல்' எனும் குறளை மனத்தில் பதித்துத் தங்கள் மக்களைக் கல்வி பயிலப் பாடசாலைக்கு அனுப்ப வேண்டும். அதுவும் 'இளமையிற்கல்' என்பதற் கொப்ப, அதிபால்யத்திலேயே கல்வி பயிற்றுவிக்க முயல வேண்டும்.

---

**மனத்திற்கு ஆணை**

மனமே! உனக்கு உத்தரவு பிறப்பிக்கிறேன். உயர்ந்த விஷயங்களையே நினை. நீ நினைப்பது யாவும் பரந்த நோக்கங் கொண்டனவா யிருக்கட்டும்.

—ஸர் பிலிப் ஸிட்னி.

## அநாமதேயக் கடிதங்கள்

### I

பிராங்கோ தலைவரே!

குட்மார்னிங்

தாங்கள் இரண்டு நாளாய் மிக வருத்தமாக இருப்பதாகக் கேள்விப்பட்டேன். தங்கள் வருத்தம் என் வருத்தமாகவே தோன்றுகிறது. 'ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்' என்பது எங்கள் தமிழ்நாட்டுப் பழமொழி. இது வரை உங்களுக்கு இந்தப் பழமொழியை யாரும் சொல்லித் தரவில்லை போலிருக்கிறது.

இதையறியாத தாங்கள் முஸோலினி, ஹிட்லர் முதலிய வெளிநாட்டாருடைய பேச்சைக் கேட்டுத் தங்கள் நாட்டு மக்களை வீணாகக்கொன்றீர்கள். எப்பொழுதும் அண்டை வீட்டுக்காரன் அண்டை வீட்டுக்காரனே. நம்மிடமிருந்து ஏதாவது பிடுங்க வேண்டுமென்றயோசனை இல்லாமல் அவன் நமக்கு உதவமாட்டான்.

என்ன இருந்தாலும் உங்கள் நாட்டார் உங்களைக் கைவிட மாட்டார். அவர்களிடத்துச் சமாதானம் செய்து கொண்டு ஒற்றுமையாக வாழுங்கள். எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம் என்பது பெரியோர் மொழி. பெரியோர் மொழியை அலட்சியம் செய்தல் தவறு. உங்களால் சமாதானம் செய்துகொள்ள முடியவில்லையென்றால் எனக்குக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு ஒரு கடிதம் எழுதுங்கள். நான் வந்து சரிப்படுத்தி விடுகிறேன்.

நாரதர்.

என் விலாசம்:—
நாரதர்,
வீண்வம்பச் சாவடி,
கலகபுரம் போஸ்டு.

### II

அலிகார் முஸ்லிம் சர்வகலாசாலையின் நிர்வாக உபஅத்தியக்ஷகரான ஜனுப் புரோபஸர் ஏ. பி. ஏ. ஹலீம் அவர்களுக்கு,

ஸலாம் அலேகும் பாய்ஜீ!

தாங்கள் கபடயற்ற பேர்வழி யென்று நினைக்கிறேன். 'தேசிய மனப்பான்மையுடைய மாணவர்களுக்கு இங்கே இடமில்லை. இந்தியாவிலே இன்னும் பதினறு சர்வகலாசாலைகளிருக்கின்றன. அவர்கள் அவைகளில் சேர்ந்து கொள்ளலாம். இது முஸ்லிம்களின் பணத்தைக் கொண்டு முஸல்மான்களுக்காகக் கட்டப்பட்டதாகும்' என்று சொன்னீர்கள்! ஐயோ பாவம்! சில மாதங்கள் முன்பு வகுப்பு வாதம் கூடாதென்றும், முஸ்லிம் மாணவர்களுக்குத் தனியாக அகில இந்திய ஸ்தாபனம் வேண்டாமென்றும் தங்கள் கல்லூரி மாணவர்கள் தீர்மானித்தார்கள். தங்கள் சர்வகலாசாலையின் புகழ் ஒரு படி உயர்ந்தது. தாங்கள் இப்பொழுது அப்புகழை அடியோடு மிதித்து நசுக்கிவிட்டீர்கள். ஆனால் எனக்கு ஒரே ஒரு விஷயத்தில் வருத்தம். உங்கள் சர்வகலாசாலை மாணவர்கள் உங்களைவிட அதிபுத்திசாலித் தனமாக ஏன் வகுப்பு வாதத்தைக் கண்டிக்கவேண்டும்! உங்கள் மாணவர்களுக்கு ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையின் அவசியம் தெரிந்திருக்கும் பொழுது தாங்கள் ஏன் அதை அறியவில்லை! ஒருகால் அந்தப் பாடத்தைத் தாங்கள் படிக்கவில்லையோ!

இங்ஙனம் தங்கள்மீது
பரிதாபங்கொண்ட பிச்சு.

### III

லண்டன் அரசியலமைப்பு அறிஞர் புரோபஸர் கீத் அவர்களுக்கு,

அன்பரே!

அடிமைகளான எங்கள்மீது தாங்கள் கொண்டுள்ள பிரேமையை என்னவென்றுசொல்வேன்? அன்பரே என்று அழைப்பதைத் தவிர வேறு ஒன்றும் என்னால் செய்யமுடியாது. தாங்கள் 'ஸ்காட்ஸ்மன்' பத்திரிகையில் எழுதிய, வியாசத்தை எங்கள் வீட்டுக் குழந்தைகள்கூடக் கேட்டு உங்களை வாழ்த்துகின்றன. ஆனால் ஒரு விஷயம். தங்களைப்போன்று யாராவது ஏதாவது சொன்னால் அப்பொழுது பிரிட்டிஷ் இராஜதந்திரிகளுக்குக் காது கேளாது. அதுவழக்கம். வீணாக நீங்கள் இந்தியாவுக்கு ஏதாவது நன்மை ஏற்படாதா என்று நினைக்கிறீர்கள்!

அமெரிக்காவின் சுதந்திரப் போர்க் காலத்தில் எட்மண்ட்பர்க் தங்களைப் போலவே கூறிக்கொண் டிருந்தார். பிரிட்டிஷ் இராஜதந்திரிகள் அவரது வார்த்தைகளைக் காதில் போட்டுகொள்ளவேயில்லை. நாங்கள் எப்படி வேண்டுமானாலும் திண்டாடிவிட்டுப் போகிறோம். தாங்கள் எங்கள் மீது அன்பு காட்டுவதற்காகக் கஷ்டப்படக் கூடாது என்பதே என் கோரிக்கை. கடவுள் தங்களை நீண்டநாள் வைத்திருப்பாராக.

பிச்சு.

குறிப்பு:— இக் கடிதம் சேராவிட்டால் உடனே எனக்குத் தெரிவியுங்கள். நேரில் வந்து விஷயத்தைச் சொல்கிறேன்.

### IV

ஸசிவோத்தமர் ஸர் ஸி. பி. இராமஸ்வாமி அய்யர் அவர்களுக்கு.

திவான்ஜீ!

தங்கள் அரசாங்கக் கடிதப்போக்குவரவுகளில் "தாழ்த்தப்பட்டோர்" என்ற பதத்தை இனிஉபயோகிக்கக் கூடாது என்று உத்தரவு பிறப்பித்திருக்கிறீர்கள். மெத்த சந்தோஷம். எங்கள் வீட்டில் காத்தான் என்று ஒரு ஹரிஜன் இருக்கிறான். அவன் கொண்டுள்ள சந்தோஷத்துக்கு அளவேயில்லை. "தாழ்த்தப்பட்டோர்" என்பதற்குப் பதிலாகப் "பிற்போக்கான சமூகத்தவர்" என்று குறிப்பிடச் சொல்கிறீர்கள். நமது "மதராஸ் மெயில்" பத்திரிகைக்கு அந்த இடத்தில் சிறிது சந்தேகம் வந்து விட்டது. "தாழ்த்தப் பட்டோர்" என்பதற்குப் பதிலாகப் "பிற்போக்கடைந்த சமூகம்" என்று அமைப்பதில் என்ன வித்தியாசம் என்று அது கேட்கிறது? நானும் அதையே கேட்கிறேன். எனக்கும் அதன் பொருள் புரியவில்லை. தயவுசெய்து ஓர் அறிக்கை மூலம் அதைத்தெரிவிக்கலாதா?

தங்கள் தாஸன்
பிச்சு

---

## 'பொம்மை மந்திரிகள்' போகமாட்டார்கள்

### நம்பிக்கையில்லாத் தீர்மானத்துக்குப் பயமில்லை

### தங்கள் வழியே செல்வார்களாம்

லண்டன் செய்தி யொன்று பின் வருமாறு கூறுகிறது:—

காங்கரஸ் மந்திரிபதவி ஏற்க மறுத்த ஆறுமாகாண கவர்னர்களும் 'ஓயிட் ஹாலுக்கு' அந்தரங்கமாகக் கடிதம் எழுதியிருந்தார்கள். 'பொம்மை மந்திரி'களைக்கொண்டு அரசியலை நடத்த இந்தியாமந்திரி துணிந்ததற்குக்காரணம் அக்கடிதங்களே. பொது ஜனங்கள் ஏற்கக்கூடிய திட்டங்களை 'அல்பாயசு மந்திரிசபை' சட்டசபை முன் சமர்ப்பித்தால் எதிர்க்கக்ஷியினர் மந்திரிசபை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானங் கொண்டுவரமாட்டார். அப்படித்துணிந்து நம்பிக்கையில்லாத் தீர்மானங்கொண்டு வந்து காங்கரஸ்காரர் வெற்றியடைந்தாலும் அதற்குப் பயந்து இப்போதைய மந்திரிகள் தங்கள் ஸ்தானங்களை ராஜிநாமா செய்யமாட்டார்கள்; சட்டசபையைக் கூட்டவும் மாட்டார்கள்; தங்கள் வழியில் போய்க் கொண்டே யிருப்பார்கள் என்று அக்கடிதங்களில் குறிப்பிடப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

## புத்தக வரவு

கீழ்க்கண்ட புத்தகங்கள் நமது பார்வைக்குக் கிடைத்திருக்கின்றன.

ஸ்ரீமான். எஸ். ஜி. கிட்டப்பா சரிதம்; டால்ஸ்டாய் சரிதம். டால்ஸ்டாய் சிறுகதைகள். திரு. ஆக்கூர் அனந்தாச்சாரி எழுதியவை. விலை முறையே 4 அணா 5 அணா 6 அணா. கிடைக்குமிடம்: கிட்டப்பா பிரசுராலயம், செங்கோட்டை.

ஸ்ரீ ரவீந்திரநாத் தாகூர் எழுதிய ஆசாபங்கம். ஸி. சுப்பிரமணிய பாரதியார் மொழிபெயர்த்தது. கிடைக்கு மிடம்: கமல நிலயம், 3 பேயாழ்வார் கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை.

கம்ப ராமாயண சாரம், பால காண்டம். ராவ்சாஹிபு வே. ப. சுப்பிரமணிய முதலியார் தொகுத்தது. விலை, ராப்பர் 1-10-0. கலிகோ 2-0-0. கிடைக்குமிடம்: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் கீழரத வீதி, திருநெல்வேலி.

பிரும்ம வித்யா. (அடையாறு நூல் நிலய வெளியீடு.) ஆசிரியர்: புரொபஸர் குன்ஹன் ராஜா எம். ஏ., வருஷச் சந்தா ஆறு ரூபாய். கிடைக்குமிடம்: டைரக்டர், அடையாறு புத்தகாலயம், அடையாறு, சென்னை.

இந்து சாதனம் புதுவருட வெளியீடு; 24 பக்கங்கள் கொண்டது; விலை 15 சதம். கிடைக்குமிடம்: இந்து சாதனம் ஆபீஸ், வண்ணார் பொன்னை, யாழ்ப்பாணம்.

இராம கிருஷ்ண மிஷன் வித்யாலயம் பெரிய நாய்க்கன் பாளையம், கோயமுத்தூர்ஜில்லா. 1936-ம் வருஷ அறிக்கை.

---

மதுரை நகரசபை ரேடியோ மூலம் விளம்பரம் செய்யத் தீர்மானித்திருக்கிறது. கதர் விளம்பரத்துக்குக் கட்டணம் கிடையாது. விதேசி, சாராயம் முதலிய விளம்பரங்கள் செய்யப்படமாட்டா.

# விதவா விவாகம் சாஸ்திர சம்மதமே

## சுருதிகளின் ஆதாரம்

### கலியாண காலங்களில் பாவனை மந்திரங்கள்

நடவாத காரியங்களுக்கு 'ஹோமமா?'

சாஸ்திரியார் கருத்து

ஸ்ரீமதி கமலாதேவி தேஷ்பாண்டே என்பவர் 'புராதன காலத்துக்குழந்தைகள்' என்று ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அதற்கு மதிப்புரை எழுதிய திரு. டி. ஆர். வேங்கடராம சாஸ்திரியார் 'ஹிந்து'வில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:—

புராதன காலத்தில் நடந்த கலியாணங்களுக்கும் தற்போதைய கலியாணங்களுக்கும் வெகு வித்தியாசமிருக்கிறது. கன்னிகாதானம், மணப்பெண்ணை மாப்பிள்ளை வீட்டுக்கு அழைத்துப் போதல், கிரஹப் பிரவேசம் இவை யெல்லாம் புராதன காலத்தில் ஒன்றன்பின் ஒன்றாக நடைபெற்றன. இப்பொழுது இவைகளை யெல்லாம் கலியாண வீட்டிலேயே பாவனை பண்ணிக்கொண்டு மந்திரங்களைச் சொல்லி வைதிகர்கள் காரியங்களை நடத்திவிடுகிறார்கள். புருஷன் வீட்டுக்கு மணப் பெண்ணை அழைத்துக்கொண்டு போய் அங்கே யாரும் காரியம் செய்யக் காணோம். கலியாண முதல் நாளன்று இரவு சில மந்திரங்கள் சொல்லப்படுகின்றன. பெண் புருஷன் வீட்டுக்குப் பிரயாணம் செய்யும்பொழுது ஏற்படக்கூடிய விபத்துகளுக்காக அம்மந்திரங்கள் சொல்லப்படுகின்றன. ஆனால் உண்மையில் இப்பொழுது பிரயாணமும் நடக்கவில்லை; விபத்தும் ஏற்படவில்லை. இவை யெல்லாம் பாவனை மந்திரங்க ளல்லவா? நான்காம்நாள் கலியாணத்தன்று 'சேஷ ஹோமம்' என்று ஒரு ஹோமம் நடத்தப்படுகிறது. நடவாத காரியங்களை நடந்ததாகப் பாவித்துக்கொண்டு அம்மந்திரங்கள் சொல்லப்படுகின்றன. (பொருள் தெரியாமலிருந்தாலும் இருக்கலாம்.)

சில விடங்களில் ஒருவகை மணம் நடந்திருக்கிறது. அதாவது கலியாண முறையில் சிறிது மாறுதல். விவாகம் முன்னாலேயே நிச்சயம் செய்யப்பட்டு விடும். பெண் பருவமடையும் வரை கலியாணம் நடைபெறுதிருக்கும். பருவமடைந்த பிறகே கலியாணம். இக்கலியாணம் நடைபெறுமுன் அவ்விருவரில் யார் இறந்தாலும் சரி, உயிருடனிருப்பவரை வைதவ்யம் பாதியாது. இவ்விருவரும் உயிருடனிருந்தால் விவாக நிச்சயத்தை மாற்ற முடியாது. இதுவே கிரேக்கர் மணமுறையுமாகும். மகாபாரதம் அநுசாஸன பர்வத்தில் இவ்விஷயம் காணப்படுகிறது. 'கேவலம் மந்திர ஸம்ஸ்க்ருதா' என்று ஸ்மிருதிகளிலே சொல்லப்படுகிறது. அதாவது மந்திரபூர்வமாகக் கலியாணம் மாத்திரம் செய்துகொண்டவர் என்று அர்த்தம். கலியாணம் மாத்திரம் செய்துகொண்டு இல்வாழ்வின் இன்பத்தை அனுபவியாதவர்கள் மறுமணம் செய்து கொள்ளலாம் என்று ஸ்மிருதிகளிலே விதவா விவாகத்துக்கு ஆதாரமிருக்கிறது.

## இரத்தம்சிந்தும் புளியமரம்

### ஆழ்வார் திருநகரில் அதிசயம்

ஆழ்வார் திருநகரில் ஓர் அதிசயமான புளியமரம் இருக்கிறது. அம்மரம் ஒரே வேர் மூலம் முளைத்து ஏழாகப் பிரிந்திருக்கிறது. அம்மரத்தின் இலைகள் இரவில் வாடிப்போவதே யில்லை. அதன் காய்கள் பழுக்காமலே உதிர்ந்துவிடுகின்றன. அம்மரத்தில் எங்கேயாவது குத்தினால் உடனே மனிதர் இரத்தம் போல உதிரம் பெருகுகிறதாம். அம்மரப் பட்டையை அரைத்து உட்கொண்டால் எல்லா வியாதிகளும் நீங்கிவிடுவதாகச் சொல்லப்படுகிறது.

# 'நான் ஒரு ஹிட்லரானல்.....'

## பரதேசப்பொருளைப் பகிஷ்கரிப்பேன்

### 'பத்து லக்ஷ ரூபாயும் சுதந்திரமும் கொடுங்கள்'

### போர்க் கப்பல் முதல் குண்டூசி வரை செய்து குவிப்பேன்

[o]

"நான் ஒரு ஹிட்லராகவோ, முஸோலினியாகவோ ஆனால் அந்நியப் பொருள்களைப் பகிஷ்கரிப்பேன்.

வருஷத்துக்குப் பத்து லக்ஷம் ரூபாயும், சுதந்திரமும் கொடுங்கள். பத்தே வருஷத்தில் சண்டைக் கப்பல் முதல் குண்டூசி வரை செய்து குவித்து விடுகிறேன்."

—ஸர் ஸி. வி. ராமன்.

மைசூர் வர்த்தக சபையின் ஆதரவில் "விஞ்ஞானமும், தொழில் அபிவிருத்தியும்" என்பதுபற்றி ஸர் ஸி. வி. ராமன் அருமையான பிரசங்கமொன்று செய்தார். அதன் சாரம் வருமாறு.—

விஞ்ஞானிகளால் மட்டும் கைத்தொழிலை அபிவிருத்தி செய்துவிட முடியாது. ஒரு கட்டுப்பாடான ஸ்தாபனமே அவ்வேலையைச் செய்ய வேண்டும். அதற்குத்தகுதியான தலைவர் ஒருவர் தேவை. கைத்தொழில் அபிவிருத்தி விஷயமாக ஏதாவது சிலகாரியங்களைச் செய்யவேண்டியது தான் விஞ்ஞானிகளின் காரியம் என்று ஜனங்கள் நினைக்கிறார்கள். அதுதவறு. புதிய புதிய தொழில்களை உண்டாக்குவது மாத்திரம் விஞ்ஞானிகள் கடமையன்று.

### விஞ்ஞானம் ஒருகலை

ஒரு விதத்தில் பார்க்கப்போனால் விஞ்ஞானமும் ஒரு தத்துவசாஸ்திரமே. முற்காலத்தில் பௌதிக, இரஸாயன, விற்பன்னர்கள் இல்லை. ஆனால் இயற்கைத்தத்துவ சாஸ்திரிகள் ஏராளமாக இருந்திருக்கிறார்கள். விஞ்ஞானத்தை இயற்கையுடன் இணைத்தால் அது ஒரு கலையாகி விடுகிறது. விஞ்ஞானி ஒவ்வொருவனும் ஆரம்பத்தில் இயற்கைத் தத்துவசாஸ்திரியாகவேயிருக்கின்றான்.

விஞ்ஞானத்தைப் பற்றியகொள்கை எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டும். நம் நாடு முன்னேற விரும்பினால் விஞ்ஞானத்தைக் கொலை செய்யக் கூடாது; ஆதரித்து அபிவிருத்தி செய்யவேண்டும்.

### விஞ்ஞானம் விளைத்த விபரீதம்

இந்நாளில் விஞ்ஞானம் விளைத்த விபரீதமென்ன? குடிசைக் கைத்தொழில்களை ஒழித்துவிட்டது; புதிது புதிதான தேவைகளை உண்டுபண்ணி விட்டது. ஒருவன் கையால் செய்யும் ஒரு பொருளைப் பாருங்கள். என்ன அழகாயிருக்கிறது. ஆனால் விஞ்ஞானிகள் கண்டுபிடித்த இயந்திரத்தால் செய்யப்பட்ட பொருள்கள் பார்க்கும் பொழுதே கண்ணை உறுத்துகின்றன. இந்திய மக்களின் சித்திரக்கலை ஆர்வத்தையும், அக்கலையில் அவர்கள் செய்துள்ள அப்பியாசத்தையும் இயந்திரங்கள் அழித்துவிட்டன. மகாத்மா காந்தி இயந்திர பூதத்தை இகழ்கிறார். இவ்விஷயத்தில் நான் அவரைப் போலவே ஒத்த அபிப்பிராயங் கொண்டுள்ளேன்.

### துஷ்பிரயோகம் செய்கிறார்கள்

இப்பொழுதைய விஞ்ஞானிகள் தங்கள் கலையைத் துஷ்பிரயோகம் செய்கிறார்கள். விஞ்ஞானக் கலையைத் தூஷித்த பழைய நாளில் "கலியாணம் சட்ட பூர்வமான காம இச்சை. இயந்திர சாஸ்திர அப்பியாசம் விஞ்ஞானத்தின் காம இச்சை" என்று டால்ஸ்டாய் சொல்லியிருக்கிறார்.

விஞ்ஞானத்தின் மூலம் ஏராளமான கைத்தொழில்களைப் பெருக்கிவிடலாம். அதனால் தேசத்து மக்களுக்கு ஏராளமான பணம் கிடைத்துவிடும் என்று சிலர் நினைக்கிறார். புதுத் தொழில்களை உண்டாக்குவதே விஞ்ஞானத்தின் காரியமன்று. அதனால் தேவை அதிகரிக்குமே யல்லாது வேறொன்றுமில்லை.

தனது தேவைகளை அதிகமாக்கிக் கொள்ளத் தேசபக்தியுள்ள இந்தியன் எவனாவது விரும்புவானா? எனக்கு அப்படித் தோன்றவில்லை. அதில் என்ன ஆனந்தமிருக்கிறது? மக்களை வறுமைக் குட்படுத்தாமல் அவர்களது தேவைகளைப்பூர்த்தி செய்வதற்குத் தான் விஞ்ஞானம் இருக்கிறது. தேவைகளை இந்நாளில் மேலும் மேலும் பெருக்கிக் கொண்டு போவதே பெரிய குற்றமென்று நான் கருதுகிறேன். அதனால் விளைவது என்ன தெரியுமா? ஐரோப்பா ஜப்பான் அமெரிக்கா முதலிய நாடுகளிலிருந்து மேலும் மேலும் பொருள்களை வரவழைக்க நேரும்.

### தக்கதலைவர் தேவை

கைத்தொழிலை அபிவிருத்தி செய்ய விஞ்ஞானிகளால மட்டும் முடியாது. ஸ்தாபனமும் தக்கதலைவரும் அதற்குத்தேவை. நாம் இறக்குமதி செய்யும் பொருள்களை யெல்லாம் நமது நாட்டிலேயே செய்துகொள்ள வேண்டும். இது விஷயமாக விவசாய இலாகா வெகுவேலை செய்திருக்கிறது. இவ்விஷயங்களில் விவசாய நிபுணர்கள் தலையிடக்கூடாது. வியாபாரிகள் நுழைந்து தங்கள் தேவைகளைக் கூறவேண்டும். விஞ்ஞானிகள் வேண்டிய உதவிகளைச் செய்வார்கள். இப்பொழுது விஞ்ஞானிகள் அதிகம்தேவை. விஞ்ஞானிகள் இல்லையென்றால் நமது பிரச்னைகளைத் தீர்க்க முடியாது. எதிர்காலத்தில் இந்தியா சரியான கல்வி பெற்று விஞ்ஞானத்துக்கு அதிக ஆதரவளிக்குமென்று நம்புகிறேன். ஏராளமான ஆராய்ச்சிகள் செய்ய வேண்டி யிருக்கின்றன. நான் எதிர்கால இளைஞர்களையே நம்பி யிருக்கிறேன்.

### உங்களை நம்புங்கள்

முதல் முதல் ஒன்று தெரிந்துகொள்ளுங்கள். அது தன்னம்பிக்கை உங்களிடத்தில் அஃது இல்லையே! அது அவசியம். துரதிர்ஷ்ட வசமாக இந்தியர்களாகிய நாம் எவ்வளவோ விஷயங்களில் கஷ்டப்படுகிறோம். அரசியல், பொருளாதாரம், மனோதத்துவம், சமூகம் முதலிய விஷயங்களில் மிகுந்த நெருக்கடிக்குள்ளா யிருக்கிறோம்.

### சுயமரியாதை வேண்டும்

எல்லாவற்றையும்விட தன்னம்பிக்கை யில்லாத குறைதான் பெரிதாயிருக்கிறது. ஒரு தேசம் முன்னேறவேண்டுமானால் சுயமரியாதையை அது நன்குணர வேண்டும். "பிற நாட்டார்கள் நிறையச் செய்து விட்டார்கள்; முன்னேறி விட்டார்கள்" என்று சொல்லவே சொல்லாதீர்கள். இந்தியாவில் ஏராளமான நிலக்கரி யிருக்கிறது. பஞ்சமே யில்லை. நமது ஜனங்கள் என்ன செய்கிறார்கள்? நிலக்கரியை எரிப்பதோடு சும்மா யிருக்கிறார்கள். அதை வேறு வழிகளில் உபயோகிக்கலாம். "அதை நாம் செய்தே முடிப்போம்" என்ற மன உறுதியுடன் திட்டம் போட்டுக் கொண்டு வேலை செய்யுங்கள். சில வருஷங்களில்தேசத்தை உயர்த்திவிடலாம்.

நமது நாட்டிலே எதற்கெடுத்தாலும் அரசாங்கத்தின் தயவை எதிர்பார்ப்பதே வழக்கமாயிருக்கிறது. ஒரு கைத்தொழிலில் அரசாங்கம் முயற்சிகொண்டால் எல்லாரும் அதற்குப் பங்குதாரர்களாகச் சேருகிறார். இல்லாவிட்டால் ஒருவர்கூடச் சேருவதில்லை.

### திட்டம் அவசியம்

இந்தியாவில் எவ்வளவோ பொருள்களை உற்பத்திசெய்யலாம். அதில் எல்லாரும் கலந்துகொள்ளவேண்டும்.

இப்பொழுது தேசத்துக்குத்தேவையான பொருள்கள் எவை? சாதனப் பொருள்கள் எவ்வளவு தூரம் கிடைக்கின்றன? அவற்றைக்கொண்டே தேவையான சாமான்களை இந்தியாவில் உற்பத்தி செய்யமுடியுமா? சிக்கனமாகச் சாமான்களைச் செய்து சொற்ப விலைக்கு விற்கமுடியுமா? என்பனபோன்ற விஷயங்களை ஆராய்ந்து ஒரு திட்டம் வகுத்து வேலை செய்யவேண்டும். அத்திட்டம் நமது கஷ்டங்களைத் தீர்க்குமானால்அது பற்றித் தியாகம் செய்யவும் நாம் தயங்கக் கூடாது.

'இனிமேல் நாம் மோட்டார்களை உபயோகிக்கக் கூடா' தென்று மகாத்மா காந்தி சொல்வாரானல்—அது நமது பிரச்னைகளைத் தீர்க்குமானல்—அவ்விஷயத்தில் நானே முன்னிற்பேன்.

### 'நான் ஒரு ஹிட்லரானல்'

நான் ஒரு ஹிட்லராகவோ முஸோலினியாகவோ ஆனல் முதன் முதலில் அந்நியப்பொருள்களை முழுதும் பகிஷ்கரிப்பேன்; ஆகாயத்தந்தியைக்கூடப் பகிஷ்கரித்து விடுவேன்.

### பத்துலக்ஷம் ரூபாய் கொடுங்கள்

"வருஷத்துக்குப் பத்து லக்ஷம் ரூபாயும் பத்து வருஷ அவகாசமும், சுதந்திரமும் எனக்குக்கொடுங்கள். கைத்தொழில் விஷயத்தில் ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடியைப் போக்கிவிடுகிறேன். சண்டைக்கப்பல் முதல் குண்டூசிவரை இந்தியாவிலேயே செய்து குவித்து விடுகிறேன்"

என்று நான் சில காலம் முன்பு சொன்னேன். இது பற்றிப்பலர் என்னைப் பரிகசித்ததுண்டு. 'சுதந்திரமும் கொடுங்க' ளென்று நான் கூறியதை அவர்கள் மறந்து விட்டார்கள்.

இந்தியாவில் இன்று நாமிருப்பது போலத் திக்கற்ற நிலைமையிலிருப்போர்க்கு ஏதாவது செய்ய வேண்டுமானல் அதற்குத் தக்க மனிதரைத் தெரிந்தெடுக்கவேண்டும். அவருக்குப் பூரண சுயேச்சையும் கொடுக்க வேண்டும். அப்பொழுதே நமதுநாடு முன்னேறும்.

## தலைவர்கள்

### ஜவஹர்

ஜவஹருக்கு 'டைபாயிடு' சுரம். அவர் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறார்.

பண்டித ஜவஹர்லால்நேரு மேமாதம் 7-ந் தேதி இரங்கூனுக்கு விஜயஞ் செய்வார்; நான்கு நாட்கள் இரங்கூனிலிருப்பார்; ஆறுநாட்களில் பர்மாவின் முக்கிய இடங்களையெல்லாம் சுற்றிப்பார்ப்பார்.

### மகாத்மா காந்தி

ஹுட்லி காந்தி சேவா சங்கத்தின் மகாநாடு இவ்வாரம் நடைபெற்றது. மகாத்மா காந்தி அதற்கு விஜயம் செய்தார்.

பீஹாரில் ஹரிஜனங்கள் மந்திரிபதவி ஏற்க மறுத்ததைப் பாராட்டி காந்தியடிகள் ஒரு செய்தியனுப்பியிருக்கிறார்.

### பாபு இராஜேந்திரர்

பாபு இராஜேந்திரருக்கு ஆஸ்த்மா திருப்பிக்கொண்டுவிட்டது. அவர் பெல்காமில் வைத்திய சிகிச்சை பெற்றுக் கொண்டிருக்கிறார்: இம்மாதம் 26-ந் தேதி அலகாபாத்தில் நடக்கப்போகும் காரியக்கமிட்டிக் கூட்டத்துக்கு விஜயஞ் செய்வார்.

## ஸ்ரீபால சுப்பிரமணிய பக்த ஜனசபை

### முப்பத்து மூன்றாம் ஆண்டு விழா

சென்னை இராயப்பேட்டை ஸ்ரீபால சுப்பிரமணிய பக்தஜனசபையின் 33-ம் ஆண்டு விழா, ஏப்ரல் 30, மே 1, 2 ஆகிய தேதிகளில் நடைபெறும். திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் தலைமை வகிப்பார்கள்.



தற்போதைய ஜப்பானின் முன்னேற்றம் மேற்கு நாட்டவர்களுடைய மூளைகளையெல்லாம் கலக்கி வருகிறது. இவ்வளவு வருஷங்களாக இல்லாதபடி இவ்வருஷம் பதினெட்டு கோடிபவுனில் ஒரு பெரிய வரவு செலவுத் திட்டத்தை ஜப்பான் தயாரித்திருக்கிறது. காரணமென்ன?

### இரண்டு நாகரிகங்கள்

ஜப்பானியருடைய மனத்தில் இரண்டு வித நாகரிகங்கள் குடிகொண்டு விட்டன. ஒன்று தாய் நாட்டது; மற்றொன்று மேற்கு நாட்டினுடையது. சில வருஷங்களுக்கு முன் வரை ஜப்பானியர் தம் தாய்நாட்டுப் பழக்க வழக்கங்களையே உயர்வாகப் பேசிவந்தனர். இப்போது அவர் தம் நிலைமை என்ன? தோட்டி முதல் தொண்டமான்வரை எல்லாரும் இருவித நாகரிகத்தில் வாழ்ந்து வருகின்றனர்.

வியாபாரி கடையில் உள்ளவரை மேற்கு நாட்டு உடையை அணிந்திருப்பான். வீட்டில் சென்றதும் 'இமோகோ' என்ற ஜப்பான் உடையை உடுத்திக் கொள்வான். மந்திரிகளும் அப்படியே; காரியாலயத்தில் உள்ளவரை நாற்காலியிலும் சோபாக்களிலும் உட்காருவார்கள்; அவர்கள், வீட்டில் தரையிலே உட்கார்ந்து சாப்பிடுவார்கள்; பேசுவார்கள்.

### தம் நாட்டு உடை

ஜப்பானியருக்குத் தம் நாட்டு உடையை உடுத்திக் கொள்வதிலேயே பிரியம் அதிகம். வில், அம்பு முதலியவற்றால் சண்டை செய்ய இன்றும் அங்குச் சிலர் பழகுகிறார். பாங்கிகளில் வேலை செய்யும் குமாஸ்தாக்களுக்குப் பழைய நாள் வழக்கப்படி மணிகளை எண்ணாமல் கூட்டல் கழித்தல் கணக்குகளைப் போட முடிய வில்லையாம்.

பிறர்க்குத் தொண்டு செய்வதில் ஜப்பானியருக்குப் பிரியம் அதிகம். உதாரணமாகப் போர்வீரர் வயிற்றில் பிறந்த சிலர் விருந்தினர்க்கு அருகில் நின்று அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்யவே பிரியப்படுகின்றனராம். அவர்களுக்குப் போர்செய்வதில் இவ்வளவு கருத்துச் செல்வதில்லை.

ஜப்பானியர், பிரான்ஸ் தேசத்து ஒயினையும், ஸ்காட்லந்து தேசத்து விஸ்கியையும் குடிப்பதோடு தாய்நாட்டு அரிசியிலிருந்து இறக்கப்பட்ட ஒருவித ஒயினைக் குடிப்பதற்கே பிரியப்படுகிறார். இக்குடி அவர்களை மெய்ம்மறந்து ஆகாயத்தில் பறக்கும்படி செய்கிறது.

### சுதேசி விளையாட்டு

ஜப்பானியரில் சிலர் 'கால்ப்' ஆட்டம் ஆடுகின்றனர். பெரும்பான்மையோர் கண்மூடி ஆட்டமே ஆடுகின்றனர். இவ்வாட்டத்தில் ஒவ்வொருவரும் ஒவ்வொருகோலை வைத்துக்கொண்டிருக்கின்றனர். ஜப்பானியரிடையே அமெரிக்கரைப்பற்றி ஓர் அவநம்பிக்கை பரவி விட்டது. ஜப்பானில் ஏழைபணக்காரர் வித்தியாசமே அதிகம் இல்லை. எல்லாரும் சேர்ந்தே சினிமா தியேட்டர் முதலிய இடங்களுக்குச் செல்கின்றனர்.

ஜப்பான் மக்களை நான்கு வகையாகப் பிரித்து விடலாம். முதல் வகையில் சேரத்தக்கவர் பெரிய பணக்காரர். இரண்டாவது வகையினர் தொழில் முதலாளிகள். மூன்றாவது வகையினர் போர்வீரர். நான்காவது வகையைச் சேர்ந்தவரே பெரும்பான்மைப் பொது மக்கள். இவர்களில் அநேகர் தொழிலாளிகள்; மற்றவர்கள் விவசாயிகள்.

### பெரும் பணக்காரர்

ஜப்பானில் வருஷத்தில் ஆறாயிரம் பவுனுக்கு அதிக வருமானமுள்ள குடும்பங்கள் 1,500 இருக்கின்றன. அறுபதினாயிரம் பவுனுக்கு மேல் வருமானமுள்ளவை இருபது குடும்பங்களே. ஆனல் இங்கிலாந்திலோ முந்தியதில் 3379 பேரும், பின்னையதில் 279 பேரும் சேர்வர். இதனல் ஜப்பான் ஏழைகள்நிறைந்த நாடுஎன்பது விளங்கவில்லையா?

# விவசாயிகள் கஷ்டம்

## ஜப்பான் இராணுவ ஆட்சி

### பொது மக்களின் தரித்திரம்

:o:

### தொழிற்சாலைகளில் பெண்கள்

(திரு. சீட்னி மோரேல்)

இவ்விருபது பெரும் பணக்காரரும் பல தலைமுறைகளாக வியாபாரிகளாய் இருப்பவரே. இவர்களே நாட்டில்உள்ள முக்கால்பாகத் தொழில்களுக்குச் சொந்தக்காரர். இவ்வகுப்புக்கு 'மித்சூயி' என்று பெயர்.

இவர்கள் சம்பத் தகுந்தவர்களல்லர். ஒரு சதுரத்துக்குள்ளே மூன்று சமகோடுகள் போட்டிருப்பதே இவர்தம் குடும்பங்களின் அடையாளங்கள். இவ்வடையாளங்களைச் சாதாரணமாக ஒரு சிறிய பெட்டியிலிருந்து விலையுயர்ந்த துணி வரை காணலாம்.

### பொதுமக்களின் தரித்திரம்

ஜப்பானில் தொழிலில் பணம் போட்டு நடத்துபவர் பணக்காரரே. பொதுஜனப் பங்குவீதப்படி நடத்துவதில்லை. பொதுஜனங்கள் அவ்வளவு ஏழைகளாக இருப்பதே இதற்குக் காரணமாகும்.

பிறகு மஞ்சுகோவைப் பற்றிச் சிறிது கவனிப்போம். 1931-ம் வருஷம் இந்நாடு ஜப்பான் ஆட்சியில் சேர்ந்தது. அது முதல் இதுவரை ஜப்பானியப் பணக்காரர் பதினொரு கோடி பவுனை இந்நாட்டு வியாபாரத்தில் போட்டிருக்கின்றனர். பொதுமக்களிடம் பணமிருந்தாலல்லவோ அவர்கள் ஒன்று சேர்ந்து ஒரு வியாபாரத்தைச் செய்தல் முடியும். அதுதான் இல்லையே!

ஜப்பானோடு மஞ்சுகோ வருஷத்தில் ஒருகோடி பவுன்வியாபாரம் செய்தது. சில நாட்களுக்குப் பின்னர் மஞ்சுகோ வியாபாரிகள் தங்களுடைய பணத்தைக் கொண்டல்லவோ தங்களோடு வியாபாரம் செய்கிறார்கள் என்பதை ஜப்பான் வியாபாரிகள் கண்டுகொண்டார்கள். அதனல் மறுபடியும் மஞ்சுகோவுக்குப் பணம் கொடுக்க மறுத்து விட்டார்கள்.

### இராணுவ ஆட்சி

மஞ்சுகோவின் ருஷ்ய எல்லைப்புறத்தில் ஏராளமான இராணுவப்படைகள் சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றன. பணக்காரர் ஏன் இந்த இராணுவப் படைக்குப் பணம் உதவுதல் வேண்டும்? எந்தப் பொறுப்புள்ள அரசாங்கத்திலும் இராணுவம் அரசாங்கக்கட்டளைக்குக் கீழ்ப்படிந்துநடக்கும். ஆனல் ஜப்பானில் இது வேறுவிதம். இராணுவத்துக்குப் பயந்து அரசாங்கம் நடக்கிறது.

ஜப்பானில் இராணுவ மந்திரி இராணுவத்தாலேயே நியமிக்கப்படுகிறார். அரசாங்கச் சம்மதமில்லாமலே இராணுவம் சட்டங்களை ஏற்படுத்திவிடும். இவ்விதப்போக்கு 1931-ம் வருஷத்தில் காணப்பட்டது. மந்திரிசபையைச் சேர்ந்தவர் ஒருநாள் இரவு நன்றாக உறங்கினர். பொழுது விடிந்ததும் அவர்கள் எல்லாரும் குற்றவாளிகளாகக் குற்றஞ் சாட்டப்பட்டனர். இவ்வளவுக்குங் காரணம் இராணுவமே.

### விவசாயிகள்

அதனல் ஜப்பானில் எதிர்காலம் யாரைப்பொறுத்திருக்கிறது. விவசாயிகளை இதற்கு வேண்டிய முயற்சிகளைத் தேடவேண்டும். மக்கள் எல்லாரும் தொழிலில் மேம்பட்டு விட்டனர். ஜப்பான் துணிகள் உலகமெங்கும் மலிந்து கிடக்கின்றன. பிரிட்டிஷார் முறையில் சைகில்களைச்செய்து ஜெர்மெனி விலைக்குப் பாதி விலையில் தென்னாப்பிரிக்காவில் ஏராளமான அளவில் விற்றுவிட்டார்கள். அமெரிக்காவுக்குக் கொடிகளையும், சீனத்துக்குத் தீக்குச்சிகளையும், ஜெர்மெனிக்குப் பீரையும் ஜப்பான் ஏற்றுமதி செய்கிறது. இத்தொழில்களில் ஜப்பான் மேற்கு நாடுகளையே பின்பற்றுகிறது. ஜப்பான் மில்களில் இருபது லக்ஷம் பெண்கள் வேலை செய்கிறார்கள்.

வெளிநாட்டாருக்கு ஜப்பானுடைய சிறிய தொழில்களைப்பற்றி அதிகம் தெரியாது. அங்குள்ள ஐந்து லட்சம் தொழிலாளரில் 2 லட்சம் பேரே தொழிற்சாலைகளில் வேலைசெய்கின்றனர். மீதியுள்ளவர் சொந்த வேலைகளைக் (குடிசைத் தொழில்) கவனிக்கின்றனர்.

குடிசைத் தொழிலில் குடும்பத்தில் உள்ள எல்லாரும் வேலை செய்கின்றனர். இக்குடிசைப் பொருள்களை வியாபாரிகள் வாங்கி விற்பனை செய்கிறார்கள். ஜப்பான் ஏற்றுமதியில் இப்பொருள்கள் 65 சதவீதம் இருக்கின்றன. 1955-க்குள் இப்போது இருப்பதைப்போல் இரண்டு மடங்கு வியாபாரம் நடக்குமென அவர்கள் எதிர்பார்க்கிறார்கள்.

### விவசாயம்

ஜப்பானில் நெற்பயிரே முக்கிய விவசாயப் பயிராக இருக்கிறது. இதற்கு மக்களுடைய மனப்போக்கும் சீதோஷ்ண நிலையும் இடந் தருகிறது. ஒவ்வொருவரும் சராசரி ஒன்றேகால் ஏக்கர் நிலமே பயிரிடுகிறார். ஜப்பானில் ஏழுகோடி விவசாயிகள் இருக்கிறார்கள்.

ஜப்பானில் இன்னும் இருபத்தைந்து வருஷங்கள் வரை வருஷம் ஒன்றுக்குப் பத்து லக்ஷம் வீதம் ஜனத்தொகை வளர்ந்து கொண்டு போகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

ஜப்பான் விவசாயப்பொருள்கள் அந்நாட்டிலேயே விலையாவதில்லை. இவ்விற்பனைக்கு விவசாயிகள் வெளிநாட்டை எதிர்பார்க்கிறார்கள். இதுபற்றி அரசாங்கம் எவ்வித முயற்சியும் செய்யவில்லை. அதனல் விவசாயிகள் அதிகமாகக் கஷ்டப்படுகிறார்கள். விவசாயிகள் குறையைப் போக்க அரசாங்கம் தற்போது நினைத்துக்கொண் டிருக்கிறது.

—'சண்டே ஸ்டாண்டர்ட்'



# பெருங் கட்டடங்கள் எதற்கு?

### சர்வகலாசாலைகளை எளியனவாக்குக

### தோட்டங்களில் கூரை

சர்வகலாசாலைகளுக்குப் பெருமிதப் பணச்செலவில் கட்டடங்கள் கட்டுவதைக்கண்டனம் செய்து திரு. இ. எஸ். சுந்தா பி. ஏ., பி. எல்., 'ஸ்காலர்' என்ற பத்திரிகையில் குறிப்பிடுவது வருமாறு:—

காரையும், சுண்ணாம்புமே மனிதனை உண்டு பண்ணக்கூடுமென்று பலர் கருதுகிறார். குருகுலவாசத்தின் மேன்மை பற்றி எல்லாரும் வானளாவப் பேசுகிறார். ஒரு சர்வகலாசாலைக்குக் கட்டடந்தான் பிரதானமா? நம்முடைய உஷ்ண தேசத்திலே பெருங் கட்டடங்களைச் சர்வகலாசாலைகளுக்காக ஏன் கட்டல் வேண்டும்? சர்வகலாசாலைகள் ஏன் எளிய முறையில் நடத்தப்படல் கூடாது? இவ்விஷயத்தில் தைரியமாக எல்லாரும் முன்வரல் வேண்டும். சர்வகலாசாலைகளுக்கும் பள்ளிக்கட்டடங்களுக்கும் கட்டடச் செலவுக்கென்று கல்வி மந்திரிகள் பணமளித்தல்கூடாது. நமது தேசத்துப்பணத்தைச் சிமிட்டிக்கும் இரும்புக்குமா வீணாகுதல் வேண்டும்? பெரிய சர்வகலாசாலைகள்யாவும் பூந்தோட்டங்களிலும் மரத்தடிகளிலும் நடத்தப்படல் வேண்டும். இவ்விஷயங்களில் பிரபலஸ்தர்கள் வழிகாட்ட வேண்டும். கூரைக் கட்டடங்களிலும் கூரை மண்டபங்களிலும் சர்வ கலாசாலைகளை நடத்தல் கூடாதா? வேண்டுமானல் விஞ்ஞான காரியங்களுக் கென்று கட்டடங்களைக் கட்டிக்கொள்ளலாம். வின்சிதோ போன்ற ஒருவர் கூரை மண்டபங்களில் பள்ளிக்கூடம் நடத்தவேண்டு மென்று தேசமெங்கும் பிரசங்கம் செய்தால் உடனே ஏராளமான உபஅத்தியக்ஷகர்கள் அவ்வழியில் திரும்பிவிடுவார்கள்.

கட்டடச் செலவுகளைக் குறைத்தால் பள்ளிக்கூடச் சம்பளம் குறையும். கல்விக்கு அதிகச் செலவு பிடிக்காது. சர்வகலாசாலைகளின் கட்டடச் செலவுகளைப் பார்த்தால் பிரமித்துப் போகவேண்டியதே. எந்நாடும் அவ்வளவு செலவைத் தாங்காது. அதுவும் நம்முடைய ஏழை நாடு நிச்சயமாகத் தாங்காது.

## முஸ்லீம்களுக்கொரு வேண்டுகோள்

### காங்கரஸில் சேருங்கள்

### தேசப்பணி செய்யுங்கள்

(சூளைநாடு - ஜனுப் அ. முகம்மது இஸ்மாயில்)

மனிதப்பிறவி

இப்பூவுலகில் ஆண்டவன் இயற்கை வனப்புக்களைப் படைத்து அதை நுகரவும், இன்பத்தைப் பருகவும், எல்லா ஜந்துக்களுக்கும் மேன்மையாய்ஆறறிவு உள்ள மானிடப் பிறவியைப் படைத்தான். எவன் இயற்கையை வெறுக்கிருனே அவன் ஆண்டவனை வெறுப்பவனுகிறன். "அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது..........." என்பது முதுமொழி. அப்படைப்பினில் எல்லோரும் சமம்.மக்களுக்குள் உயர்வு தாழ்வு கிடையா. எந்த வகையிலும் ஒருவன் மற்றவனுக்கு அடிமையாக மாட்டான் என்பது இஸ்லாத்தின் கொள்கை ஆகும்.

சுதந்திரம்

சுதந்திரம் மக்களின் பிறப்புரிமை. அடிமைத் தனத்தை இஸ்லாம் மதம் அனுமதியாது.

சுயநலம் கருதி வாழ்பவன் ஒரு காலும் ஆண்டவன் அருள் பெறவும் மாட்டான், அவன் மக்கள் இனத்தைச் சார்ந்தவனுமல்லன். பிறர்நலம் கருதி வாழ்பவனே மக்கள் இனத்தைச் சார்ந்தவன், சுயநலம் கருதுபவன் மாக்கள் இனத்தைச் சார்ந்தவனுவான்.

தற்பொழுது பாரதநாட்டில் வாழும் நாம் அடிமையாகவே பாவிக்கப்படுகிறேம். பலர் உண்ண உணவும் உடுத்தப் போதிய உடையுமின்றி வறுமையால் வாடுவதை நாம் கண் கூடாகப் பார்க்கிறேம். மற்ற நாட்டவர்கள், "பாரத நாடு பொன்விளை நாடு" என்று கருதிச் சுரண்டுகிருர்கள்.

நாட்டின் நிலைமை

அப்படி அவர்கள் கொண்டு செல்லும் செல்வத்தைத் தம் நாட்டில் வேலையில்லாதவர்களுக்கும் மற்றும் தம் நாட்டினருக்கும் தானம் செய்து தம் நாட்டினருக்கு இடுக்கண் வாராது காக்கிருர்கள். இராணுவத்திற் கென்றுகூட கோடிக் கணக்கில் செலவுசெய்து தம் நாட்டினரையே வைத்திருக்கிருர்கள்.

ஜாதி வித்தியாசம்

இந்திய அடிமை வாழ்விற்குக் காரணம் சாதி வித்தியாசமே. சாதி வித்தியாசம் என்றைக்கு ஒழிந்து "எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் இந்திய மக்கள்"என்பது எப்போது நிலவுமோ அப்போதுதான் விமோசன காலமாகும்.இந்தச் சமதர்மக்கொள்கை நிலவவேண்டும். சுயராஜ்யம் அடைய வேண்டுமென்று ஐம்பது வருடங்களாகக் "காங்கரஸ்" மகாசபை முயன்று வருகிறது. இம் மகாசபைக்குத் தலைவர் போன்றவரும், எல்லோர் மனதிலும் இருந்து பூஜிக்கத் தக்க சிரேஷ்டமானவரும், பாரதத்தாயின் அருந்தவப் புத்திரருமாகிய காந்தியடிகள் சமதர்மத்திற்காக அரும்பாடுபட்டிருக்கிருர்கள்என்பதைத் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தாம் எழுதிய "மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்" என்ற புத்தகத்திலும், "தமிழ்த்தென்றல்" என்ற புத்தகத்திலும் நன்குவிளக்கியிருக்கிருர்கள்.

மகாத்மா காந்தி ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்காக அரும்பாடுபட்டிருக்கிருர். அவர் முஸ்லிம்களின்மேல் உள்ள அன்பைக் "கிலாபத்" இயக்கத்தில் சேர்ந்து தொண்டாற்றியதினின்றும் நன்கு விளங்கும். காந்தியடிகள் இஸ்லாம் மதத்தில் துவேஷம் இல்லாதவர் என்பது அவர் "குரானை"ப்பற்றி எழுதியிருப்பதே [illegible]ன்ருகும்.

காங்கரஸ்

முஸ்லிம்களும் காங்கரஸ் இயக்கத்தில் சேர்ந்து சிறை சென்று தியாகம் செய்திருக்கிருர்கள். எல்லைப்புற காந்தி என்று போற்றப்படும் அப்துல் காபர்கான் அவர்கள் தலைவராகவும் சிறை சென்றும் தேசத்தொண்டாற்றி வந்திருக்கிருர்கள். ஆனல் பெரும்பான்மையோர் காங்கரஸில் சேராது இருப்பது தேசமக்களாகிய சகோதரர்கள் சகோதரிகள் நலத்தைக் கோராது வாளா இருப்பது போல் ஆகும். தற்பொழுது இந்தியர்களாகிய நாம் ஒரு நெருக்கடியான நிலைமையில் இருக்கிறேம். இந்தியாவில் பிறந்த எந்த மதத்தைச் சார்ந்தவனுயினும் இந்தியாவின் சுதந்திரப் போரில் பங்கிட்டுக்கொள்ளாதான் பேடியுஞ் சுயநலம் கருதும் பாவியுமாவான்.

வேண்டுகோள்

என் அன்பார்ந்த முஸ்லீம் சகோதரர்களே! இந்த நெருக்கடியான சமயத்தில் நாம் சற்றும் விலகிநிற்றல்கூடாது. தேசத் தொண்டாற்றும் காங்கரஸ் என்னும் தேசியக் கட்சியில் சேர்ந்து தேசத் தொண்டாற்றுவோமாக.

முஸ்லீம் சகோதரர்களே! காங்கரஸில் அங்கத்தினராகச் சேர்ந்து தொண்டாற்றி இஸ்லாம் மதத்தின் வெற்றியையும் வீரத்தையுங் காண்பித்து, தேசத் தொண்டாற்றுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

## மாதிரிக் கலியாணங்கள்

### ஜெர்மேனியில் புருஷனுக்குப் பஞ்சம்

### மேற்கு நாடுகளின் நாகரிகம்!

மாதிரிக் கலியாணம் என்றல் தெரியுமா? அது ஒரு அதிசயமான கலியாணம்; ஜுகோஸ்லோவியாவில் நடைபெறுகிறது. ஒருவன் ஒரு பெண்ணை விரும்பித் தன் வீட்டுக்கு அழைத்துச் செல்வான்; சிலநாள் அவளுடன் குடித்தனம் செய்வான்; அவள் தனக்கு ஏற்ற மனைவிதானு என்பதை நன்ருகத் தெரிந்து கொள்வான்; மனத்துக்குப் பிடித்தால் அவளை வைத்துக் கொள்வான்; பிடித்தமில்லாவிட்டால் அடித்துத் துரத்தி விடுவான். இத்தகைய உயர்ந்த நாகரிகத்தை எங்கேயாவது கேள்விப்பட்ட துண்டா? இவ்விதம் ஒரு மனிதன் 13 வருஷங்களில் 35 தரம் பெண்களை மாற்றிப் பார்த்தான். 13 பேரையே அவன் மணந்துகொண்டான். பாக்கி யெல்லாரையும் மாதிரி பார்த்ததுடன் சரி. சில பெண்களைப் பதினைந்து நாட்களும், சிலரை ஒரு வருஷகாலமும் அவன் 'மாதிரி' பார்த்திருக்கிருன்.

அங்கே அப்படி. ஜெர்மேனியைச் சற்றுப்பாருங்கள். அங்கே ஆண்கள் அதிகமாயில்லை; பெண்களே அதிகமாயிருக்கிருர்கள். ஆகையினல் அநேகம் பெண்கள் 'கணவனில்லையே' என்று அழுதார்களாம். எத்தனை நாளைக்கு இவ்விதம் வருந்துவது? அப்புறம் ஜெர்மெனியின் ஜனத்தொகை குறைந்துவிடாதா? பார்த்தது அரசாங்கம்; ஒரு விதி விதித்தது.

விவாக மாகாத பெண்கள் புருஷனில்லையே யென்று கவலைபடவேண்டியதில்லை. தேசத்துக்கான வேலைகளைச் செய்தபின் ஒழிந்த நேரங்களில் தங்களுக்குப் பிடித்தமான யாராவது ஒருவரைக் கணவனுக நியமித்துக் கொள்ளலாம். அவ்விதம் பிறக்கும் குழந்தைகளை அரசாங்கம் அங்கீகரிக்கிறது! மேற்கு நாடுகளின் நாகரிகம்!



## ஐரோப்பா முழுமையும் குழப்பம்

### குடியாட்சிக்கும் சர்வாதிகாரத்துக்கும் போர்

### மக்கள் உரிமை பிடுங்கப்படுமோ?

(நமது நிருபர்)

எங்கும் யுத்தம்

ஐரோப்பா ஒரு யுத்தக்களமாகவே மாறிவிட்டது. கோடிக்கணக்கான மக்கள் தங்கள் சுதந்தரத்துக்காகப் போராடுகிறர்கள். சில தேசங்களில் மனிதவாழ்வில் உயிர் இல்லாமல்போய் விட்டது. சில நாட்டுமக்கள் சர்வாதிகாரிகளுக்கு அடிமைகளாகி மிருகங்கள் போன்று நடத்தப்படுகிருர்கள். சிலர் நடைப்பிணங்களாக இயந்திரங்களுக்கு அடிமையானர். இவற்றை ஐரோப்பியர் இப்போதே உணர்ந்தனர்; விடுதலைபெறப் போரிடுகின்றனர்.

ஐரோப்பிய வாழ்வு தற்போது மிகத் தாழ்ந்த நிலைமையில் இருக்கிறது. அதை மாற்றி அவ்வாழ்வைப் புனிதப் படுத்தவேண்டுமென்பதே இப்போரின் நோக்கம். தொழிலாளர் பல நூறு ஆண்டுகளாக நசுக்கப்பட்டனர். இனியும் அவ்வாறு செய்தல் முடியுமா?

தொழிலாளர் முன்னேற்றம்

இத்தனை வருஷக்கஷ்டத்தின் பயனுக ஏழைத் தொழிலாளர் சிறிது சுதந்திரம் பெற்றனர்; அதிக வருவாயைப் பெற்றனர். அவர்களுக்கு வாக்குரிமைச் சுதந்திரம் அளிக்கப்பட்டது. கடவுள் படைத்த இவ்வுலகம் அவர்களுக்கும் உரியது என்பது இப்போதே கருப்படுகிறது. இதுவும் அவ்வளவு பெருமையுடையதன்று. சென்ற ஆயிர வருஷங்களாக இவ்வேழைமக்கள் பல வீடுகளைக் கட்டினர்கள். யாருக்காக? பணக்காரர் சுகமாக வாழ்வதற்காக. இவர்களுக்கோ இருக்க வீடும் தங்க நிழலும் கிடையா.

சுமார் பதினைந்து வருஷங்களுக்கு முன் ஜெர்மெனி, இதாலி ருஷ்யா, ஸ்பெயின், பிரான்ஸ் முதலிய நாடுகளிலுள்ள தொழிலாளிகள் அடிமைக் கட்டினின்றும் விடுபட்டார்கள். பலருடைய நன்மைக்காகவும் அவர்கள் பாடுபட ஆரம்பித்தார்கள்.

குடியாட்சி நசிதல்

சில இடங்களில் இம்முயற்சி வெற்றி பெறவில்லை. இன்னும் பல இடங்களில் குடியாட்சி நசித்துப் போய்விட்டதென்றே கூறலாம். ருஷ்யா,ஸ்பெயின், இதாலி, ஜெர்மெனி முதலிய நாடுகளில் பொதுமக்களாலேயே அரசாங்கங்கள் நடைபெறவில்லை.

ஆனல் குழப்பங்கள் பல உண்டானமை வாஸ்தவமே. இவையெல்லாம் பொதுமக்களின் நன்மைக்காகவே. இக்குழப்பங்களால் சிலருடைய மனம் மாறுபட்டது. இவர்கள் குடியாட்சியை வெறுத்து முதலாளித்வத்தோடு சமரஸம் பேசஆரம்பித்தார்கள்.

சர்வாதிகாரிகள்

இப்படித் தமோடும் பொதுமக்களுக்குச் சரியான வழி காட்டுவதற்காகச் சிலர் தோன்றினர். அவர்களே சர்வாதிகாரிகள். அதனல் சர்வாதிகாரிகள் கெட்டவர்கள் என்று கூறுதற்கும் இல்லை. அவர்களில் பலர் வீரமுடையவர்; பணிவுள்ளவர்; நல்ல வேலைக்காரர்; தேசபக்தி நிறைந்தவர். குடியாட்சி தோல்வியடைந்த நாடுகளில் அவர்கள் ஒரு புதுவழியைக் கோலினர்கள்; அவ்வழியில் வெற்றி பெற்றுர்கள். சர்வாதிகாரிகள் நாட்டில் பொது மக்கள் வாக்குக்கு மதிப்பு இல்லை. எங்கும் ஒரே இராணுவ ஆட்சி. மனித முன்னேற்றத்துக்கு அவர்கள் பெரும் விரோதிகள். அவர்தம் ஆட்சியில் மனிதருக்குச் சுதந்திரம் இல்லை. அவர்தம் ஆணைக்குத் தேசம் பணியவேண்டுமாம், இப்படிப்பட்ட சர்வாதிகார ஆட்சி ஐரோப்பாவை விழுங்கிவருகிறது. இதனல் பர்லின், ரோமாபுரி, வியென்னு முதலிய நகரங்கள் ஒன்று சேர்ந்துவிட்டன. ஐரோப்பாமுழுவதும் இவ்வாட்சியின் வேகம் தலைவிரித்தாடுகிறது.

இந்நிலைமையில் ஐரோப்பாவை ஒரு யுத்தக்களமென்று கூறுதல் மிகையாகாது. யுத்தம் ஒன்ருக இருந்தாலும் கட்சிகள் பலவாக இருக்கின்றன.

பல நாடுகள்

கிரீஸ் குடியாட்சிக்குச் சிறப்புப் பெற்றது. அந்நாட்டில் இப்போது சர்வாதிகாரம் நிலைபெற்றுவிட்டது.

பல்கேரியாவில் இராணுவமே அரசாங்கத்தை நடத்தி வருகிறது.

ருமேனியாவில் சில முதலாளிகள் ஒன்று சேர்ந்து ஏழைமக்களை நசுக்குகிருர்கள். பத்திரிகைகள் கொளுத்தப்படுகின்றன. யூதர்கள் துரத்தப்படுகிருர்கள். ஆணும் பெண்ணும் சுதந்திரத்துக்காகப் போரிடுகின்றனர்.

யூகோஸ்லேவியாவில் சென்ற எட்டு வருஷங்களாக யுத்தம் நடந்து கொண்ருக்கிறது. ஓர் அரசர் கொல்லப்பட்டார். நூற்றுக்கணக்கான மக்கள் இறந்தார்கள். இன்னும் முடிவு தெரியவில்லை.

போலந்தில் இராணுவத்தில் பிரிவினை ஏற்பட்டது. அதனல் அந்நாடு யுத்தமயமாக இருக்கிறது.

ஆஸ்திரியாவில் உள்ள அறுபது லட்சம் மக்களை ஆறுபேரே ஆள்கின்றனர்.

ஸ்பெயினைப்பற்றிச் சொல்ல வேண்டுவதில்லை. உள்நாட்டுக் குழப்பம் அத்தேசத்தை வாட்டுகிறது.

இதாலியிலும் ஜெர்மெனியிலும் சர்வாதிகாரிகள் பொதுமக்களைக் கசக்கிப் பிழிகிருர்கள்.

இந்த யுத்தத்தில் எது வெற்றி பெறுமென்று கூறுவதற்கில்லை. 'கம்யூனிஸ'மும் 'பாஸிஸ'மும் போரிடுகின்றன. சமதர்மமே மக்களின் லட்சியமெனக் கருதப்படுகிறது.

மக்கள் சுதந்திரத்தைப் பிடுங்குபவர் பொதுமக்கள் விரோதிகளே. இவர்களை ஒழிக்க வேண்டுமானல் பொதுமக்கள் சுதந்திரம் பெறுதல் வேண்டும். ஐரோப்பாவில் பாதி நாடுகள் அடிமையாகவும்,மற்றப்பாதி சுதந்திரத்தோடும் வாழ்தல் முடியாது. ஏதாவதொன்றே நிலைபெறுத்தப்படும்.

'ஸண்டே ஸ்டாண்டர்ட்'

## தேசியக் கொடியை உயர்த்துக

### இன்றேல் தேரிழுக்க மாட்டோம்

### அம்பா சமுத்திர மக்கள் ஆர்வம்

அம்பா சமுத்திரத்தில் ரதோற்சவம் நடைபெற்றது. தேரின்மீது தேசியக் கொடியைப் பறக்கவிட வேண்டுமென்று மக்கள் விரும்பினர்கள். கோயில் அதிகாரிகள் அதை ஆக்ஷேபித்தார்கள். ஜனங்கள் தேரிழுக்க முடியாதென்று சத்தியாக்கிரஹம் செய்தார்கள். கடைசியில் அக்கோயிலின் மாஜி தர்மகர்த்தரும், பிரபல பிராசுதாரருமான திரு. நாராயணசாமி அய்யர் வற்புறுத்தியதன் பேரில் தேரின் மீது தேசியக்கொடி உயர்த்தப் பட்டது. அவ்வளவே! முக்கால் மணிநேரத்தில் தேர் நிலைக்கு வந்துவிட்டது. "மகாத்மா காந்திகி ஜே! பாரதமாதாகி ஜே!" என்ற கோஷத்துடன் தேரிழுக்கப் பட்டது,





"நாளைய தினம் உங்கள் பெண்ணைப் பார்க்க மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் வருகிருர்கள். மாப்பிள்ளைக்கு ரயிலில் வேலை; நூறு ரூபாய் சம்பளம்; வயது நாற்பத்திரண்டுதானுகிறது. பார்வைக்கு அவ்வளவு கிழவராகத் தெரியாது. முப்பது முப்பத்திரண்டு வயதுதான் மதிக்கலாம். அவரது மூத்த மனைவிக்கு இரண்டு பெண்கள். ஒருத்திக்குக் கலியாணமாகி விட்டது. இன்னெருத்திக்கு ஆகவேண்டும். இரண்டாவது மனைவிக்கு மூன்றே மூன்று பிள்ளைகள். எல்லாரும குழந்தைகள். அவ்விரண்டு மனைவியரும் இறந்து விட்டனர். குழந்தைகள் எல்லாம் தாயில்லாப் பிள்ளைகளாக ஏங்கித் தவிக்கின்றன. அவற்றைப் போஷித்து வளர்க்கத் தான் அவர் உங்கள் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்கிறேனென்கிருர். இதை விட்டால் நல்லவரன் உங்களுக்குக் கிடைக்காது. எல்லாவற்றையும் யோசித்துச் சொல்லுங்கள்" என்று அப்புக்குட்டி சாஸ்திரியார் சொல்லிப் போனர்.

* * *

ஸ்ரீவாஞ்சியத்தில் செல்லம்மாள் என்ற பெண்மணி வசித்து வந்தார். அப்பெண்மணி விதவை. அவருக்கு ஒரே ஒரு பெண். வேறு உற்றர் உறவினர் எவருமில்லை. அந்தப்பெண்ணுக்குக் கலியாணம் நடைபெற வேண்டும். பாவம் கைம்மைப் பெண்மணி! என்ன செய்ய முடியும்?

கலியாணகாலம் வந்துவிட்டால் அப்புக்குட்டி சாஸ்திரிக்குச் சற்று மதிப்பு உயரும். சதா பத்துப் பேர் அவரைச் சுற்றிக் கொண்டிருப்பர். பொடிக் குடுக்கையைத் தட்டித் தட்டிச் சும்மா உறிஞ்சிக் கொண்டே சமஸ்தான விவகாரங்களை யெல்லாம் அப்புக்குட்டி சாஸ்திரியார் பேசி முடித்து விடுவார். இம் மாதிரியான தட்டுக்கெட்ட கலியாணங்கள் செய்து வைப்பதில் அவர் பலே பேர் வழி. செல்லம்மாள் தம் பெண்ணுக்கு ஒருவரன் பார்த்துச் சொல்லுமாறு சாஸ்திரியாரிடம் சொல்லியிருந்தார். சாஸ்திரியாரும் ஒரு வரன் பார்த்துச் சொன்னர்.

மறுநாள் மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் வந்து பெண்ணைப்பார்த்துத் தங்கள் சம்மதத்தையும் தெரிவித்துப் போனர்கள். செல்லம்மாளின் பெண்ணின் பெயர் கனகம். கனகத்துக்கு அந்தக் கிழ மாப்பிள்ளையை மணக்கச் சம்மதமில்லை.

கனகம்:—அம்மா! அந்தக் கிழவனுக்கா என்னை வாழ்க்கைப்படச் சொல்கிருய்.

செல்லம்:—கனகா! நான் என்ன செய்வேன்! உனக்கோ வயதாகி விட்டது. எனக்கோ கலியாணம் செய்து கொடுக்கச் சக்தியில்லை. நான் உனக்கு வேறு என்ன சொல்லக்கூடும்?

கனகத்தின் கண்ணில் நீர் ததும்பிற்று. அவள் ஒன்றும் பதில் பேசவில்லை. ஸ்ரீவாஞ்சியத்தில் வேதவல்லி யென்ற ஓர் அம்மையார் இருந்தார். அவர் "வனிதா ஆசிரமம்" ஒன்றை நடத்திக் கொண்டிருந்தார்.

பெண்களுக்குத் தொண்டு புரிவதும் அவர்களது துயரங்களைக்கேட்டு அவற்றைப் போக்குவதுமே அவரது காரியம். கனகம் வேதவல்லியம்மையாரிடம் சென்றுள்; தன் மனத்திலுள்ள துயரங்களையெல்லாம் எடுத்துச்சொன்னுள். வேதவல்லிக்கு மனமிளகி விட்டது. தம்மாலானவரை உதவி புரிவதாக அவர் வாக்களித்தார். அடுத்த இரண்டு தினங்களில் வேதவல்லி அம்மையார் செல்லம்மாளின் வீட்டுக்கு வருவதும், அவர்களுடன் ஏதோ பேசுவதும், போவதுமாயிருந்தார்.

* * *

"கனகத்துக்குக் கலியாணம். மாப்பிள்ளை யாரோ ஒரு கிழவராம். கனகம் அவரைக் கலியாணம் செய்துகொள்ள மாட்டேனென்று பிடிவாதம் செய்கிருளாம்" என்று தெருவில் சிறுவர்கள் பேசிக்கொண்டார்கள்.

## சிறுவனை மணந்த கிழவன்

(சத்திதாஸன்)

"இல்லை; இல்லை. கலியாணம் நிச்சயமாகி விட்டதே. வனிதாசிரமம் வேதவல்லி அம்மையார் தாம் அதில் மிகுந்த சிரத்தை யெடுத்துக்கொண்டு கலியாணத்தை நடத்தி வைக்கப்போகிருராம்" என்று வேறு சிலர் குழந்தை சொல்லிக்கொண்டார்.

* * *

கலியாணதினமும் வந்தது. மாப்பிள்ளை வீட்டார் வந்திறங்கினர். மாப்பிள்ளை, மாப்பிள்ளையினது சகோதரி, மாப்பிள்ளையின் குழந்தைகள் ஆகிய இவர்களே கலியாணத்துக்கு வந்திருந்தவர்கள். வேதவல்லியம்மையார் கனகத்துக்குக் கலியாணம் செய்துவைக்கிருர் என்று ஊரில் உள்ள எல்லாரும் கனகத்தின் வீட்டில் வந்து கூடிவிட்டனர். குறித்த சுபவேளையில் தாலியும் கட்டியாய் விட்டது. சாப்பாடும் ஆயிற்று. பகலில் எல்லாரும் பேசிக் கொண்டு உட்கார்ந்திருந்தனர். மாப்பிள்ளையின் குழந்தைகள் எல்லாம் தங்கள் சிற்றன்னையிடம் விளையாடிக் கொண்டிருந்து விட்டுத் தகப்பனரிடம் சென்றன.

"அப்பா! சின்னம்மாவின் கை இரும்பைப்போல இருக்கிறதுஅப்பா!" என்றது ஒரு குழந்தை.

"இல்லே அப்பா! சின்னம்மாவைப் பார்த்தால் புருஷனைப்போல இருக்கு அப்பா!" என்றது இன்னெருகுழந்தை.

"அப்பா! சின்னம்மா வந்து 'உம்' என்று உருட்டிவிழிக்கிருள்" என்று ஒரு குழந்தை கூறியது.

சாயங்காலம் சிற்றுண்டி நேரம். மாப்பிள்ளைக்கு மணப்பெண் சிற்றுண்டி கொண்டு வந்தாள். தம் மனைவியை எப்பொழுது காண்போம் என்று ஏங்கிக்கொண்டிருந்தார் மாப்பிள்ளை. சிற்றுண்டியை எடுத்து வாயில் போட்டுக் கொண்டே "கண்ணே!" என்றுர்.

"தட, புட" வென்று மணப்பெண் புடவையை அவிழ்த்தாள். எல்லாரும் திகைத்து விட்டனர். மணப்பெண் நின்ற விடத்து அரை நிஜாரோடு ஒரு பையன் நின்றுன். "ஐயோ! ஐயோ" என்று அலறினர் மாப்பிள்ளை. வேதவல்லி அம்மையார் விழுந்து விழுந்து சிரித்தார்.மற்றவர் ஆச்சரியப்பட்டனர்.

"அப்பா! நான் அப்பொழுதே சொன்னேனே! பார்த்தாயா! சின்னம்மா ஆண் பிள்ளையாகி விட்டாள்" என்று மாப்பிள்ளையின் குழந்தைகள் கூறின.

"பதர்களே! பாருங்கள்! உங்களை என்ன பாடுபடுத்துகிறேன். பெண் தருகிறேனென்று சொல்லி ஏமாற்றி ஓர் ஆண்பிள்ளைக்கா என்னைத்தாலிகட்டச் சொன்னீர்கள்! விட்டேனுபார்! உங்கள் மீது மான நஷ்டவழக்குத் தொடர்கிறேன்" என்று பதட்டத்துடன் கூறினர் கிழ மாப்பிள்ளை.

அவ்வளவுதான். இன்னும் அங்கே நின்றல் மேலும் ஏதாவது கிடைத்து விடப்போகிறதே யென்று பயந்து மாப்பிள்ளை சொந்த ஊருக்குக் கம்பி நீட்டிவிட்டார்.

மாப்பிள்ளை வெளியேறியதும் எல்லாரும் விழுந்து விழுந்து சிரித்தனர். வேதவல்லி அம்மையார் சொல்கிருர்:

"கிழம். வயது ஐம்பதாகப்போகிறது. இரண்டு கலியாணம் ஆய்விட்டன. மூன்ருவது கலியாணம் வேறு? எனக்கு மிகுந்த ஆத்திரம் வந்து விட்டது. கனகம் வந்து என்னிடம் சொன்னுள். உடனே இந்த மாப்பிள்ளையை அவமானப்படுத்தி என் தம்பிக்குக் கனகத்தைக் கலியாணம் செய்து விடுவதென்று தீர்மானித்தேன். என் தம்பிக்குப் பதினெட்டு வயது ஆகிறது.

பெண்வேஷம் அவனுக்கு நன்ருய்ப் பொருந்தும். ஆகையால் அவனை மணப்பெண்ணுக வேஷம்போட்டுக்கொள்ளச் சொன்னேன். கனகம் எனது ஆசிரமத்திலிருக்கிருள்.இவ்வளவு தூரம் நடித்ததும் அந்த உபாயத்தைச் சொல்லிக் கொடுத்ததும் என்தம்பி தான். ஆகையால் என் தம்பி கந்தனுக்கும் கனகத்துக்கும் இனிமேல் கலியாணம் நடக்க வேண்டியதே பாக்கி."

வேதவல்லியம்மையாரின் உபாயத்தைக் கேட்ட எல்லாரும் வயிறுவெடிக்கச் சிரித்தனர். கோபித்துக் கொண்டு போனமாப்பிள்ளை மானநஷ்டவழக்குத் தொடர்ந்து மீதியிருக்கும் மானத்தையும் நஷ்டமாக்கிக் கொள்ளவிரும்பாதவர்போல் சும்மாயிருந்து விட்டார்.

கனகத்துக்கும், கந்தனுக்கும் கலியாணம் சுபமுகூர்த்தத்தில் நடைபெற்றது. அப்புக்குட்டி சாஸ்திரியார் பூரி தக்ஷிணை வாங்க வரவே காணேம்.

Printed at the Sadhu Press: Published by T. V. Kalyanasundaran (Editor) 12, Ganapathi Mudali Street, Royapettah, Madras.

